வெண்மையாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

பிரகாசமாக
சலவை செய்யப்
பட்டுள்ளன

ஸன்லைட்
சோப்பில்
தான்




துணிகளை அடித்துத்துவைக்காமலே வெண்மையாகவும் பிரகாசமாகவும் சலவை செய்கிறது!

S. 172-50 TM

# olivetti



**Lexikon**

All our Patrons and Owners
of 'OLIVETTI' Typewriters

We have the pleasure to invite you to make full use of Service in our fully equipped and efficient workshop.

A full range of English, Hindi and Marathi. Standard, Studio and Portable Typewriters and Calculators in ready stock. Demonstrations of the machines arranged.

***Apply for dealership immediately.***

**Sales & Service :**

**KAMANI ENG. CORPN. LTD**

BOMBAY — MADRAS — CALCUTTA — DELHI





# கோத்ரெஜ் வத்னி

## சரசமான விலைக்கு
## உயர்தர சோப்பு

கோத்ரெஜ் சோப்ஸ், லிமிடெட்.

## தி பாலுஸேரி பெனிபிட் சிட் பண்டு லி-ட்.

தந்தி: EVERMANS] (இந்தியாவில் இணைக்கப்பட்டது) [போன்: 85834

நெ. 3, சிங்காராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5

### மாதச் சீட்டுகள்

சந்தா செலுத்தும் கடைசி தேதி 9-2-1952 ★ ஏலத் தேதி 16-2-1952

ஜனவரியில் ஆரம்பமான சீட்டுக்குத் தேவைக்கு அதிகமான சந்தாதாரர்கள் சேர்ந்து விட்டபடியால் பழைய வாடிக்கைக்காரர்கள் புதிய மெம்பர்கள் மற்றும் நேயர்களின் சௌகரியத்தை உத்தேசித்து இன்னொரு புதிய சீட்டு ஆரம்பித்திருப்பதை தெரிவித்துக் கொள்கிறோம். இப்புதிய சீட்டு B முதல் F வரை ஐந்து வகுப்புகளாக பிப்ரவரி மாதத்திலிருந்து ஆரம்பமாகும்.

| | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| B | கிளாஸ் | டிக்கெட் | ரூ. | 2500/- | மாதம் | ரூ. | 100/- |
| C | ,, | ,, | ரூ. | 1250/- | ,, | ரூ. | 50/- |
| D | ,, | ,, | ரூ. | 625/- | ,, | ரூ. | 25/- |
| E | ,, | ,, | ரூ. | 500/- | ,, | ரூ. | 20/- |
| F | ,, | ,, | ரூ. | 375/- | ,, | ரூ. | 15/- |

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்கிகளின் செக் பெற்றுக் கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகைகளை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். புதியதாகச் சேர விரும்புவோர் சீக்கிரமாகவே சேரக் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர். வேண்டுவோருக்கு இலவசமாக நிபந்தனைகளும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும்.

(போர்டாரின் உத்திரவுப்படி.)

எம். வி. சுப்ரமணியம்
மானேஜிங் டைரக்டர்.

கல்கி



# பொருளடக்கம்

மலர் 11 இதழ் 26 | 1952 ஜனவரி 27 | கர ஹு தை 14



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.

## இப்போது தெரிந்ததா?

SHASTRY

சென்னை நகரில் ஆந்திரர்கள் பாத்தியதையை நிலைநாட்டுவதற்காக ஸ்ரீ டி. பிரகாசம் மைலாப்பூர் தொகுதியில் தேர்தலுக்கு நின்றார்; படுதோல்வியடைந்து டெபாஸிட் தொகையை இழந்தார்.

# தெய்வத் தமிழால் சமயத் தொண்டு

திருவண்ணாமலையிலே இரண்டு மூன்று வருஷங்களுக்கு முன் நாலு முழம் கதர் காஷாய வஸ்திரம் தரித்த ஒரு ஸ்வாமிகள் சிவபூஜை செய்து கொண்டிருந்தார். அப்போது நாய் ஒன்று தெறிகெட்டு அவ்விடத்துக்கு ஓடி வந்தது. அதை யாரும் கவனிப்பதற்குள், ஸ்வாமிகளின் கமண்டலத்தில் இருந்த தீர்த்தத்தைக் குடித்து விட்டது.

பக்கத்தில் நின்று கொண்டிருந்த உயர்தர அதிகாரி ஒருவர் அதைக் கண்டு ஆத்திரம் கொண்டு அந்த நாயை அடித்து விரட்டிவிட்டார்.

இச் சம்பவத்தைக் கண்ணுற்ற ஸ்வாமிகளின் மனம் உருகியது. உடனே அந்த மகான் அந்த அதிகாரியைக் கொண்டே அதிகாரியினால் விரட்டப்பட்ட நாய் உள்பட அந்த நகரில் உள்ள நாய்களுக்கெல்லாம் அன்று வேண்டிய அளவு விருந்து படைக்க ஏற்பாடு செய்தார்!

இத்தகைய கருணைச் சித்தம் உள்ள ஜகத்குரு ஸ்ரீ சந்திரசேகரேந்திர ஸ்வாமிகள் ஆதிசங்கரரின் பரம்பரையில் தோன்றியவர்; இன்று ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியாக விளங்குகிறார். தமது அரிய உபதேச மொழிகளாலும் அன்பினாலும், யோகத்தினாலும் பூஜையினாலும் ஜீவித்து மதத்தையும் மக்களையும் உத்தாரணம் செய்யும் மகா புருஷராகத் திகழ்ந்து வருகிறார்.

சிறந்த தத்துவ நிபுணரான பால் பிரண்டன் என்ற அமெரிக்கர் இந்த மகானை நேரில் தரிசித்துக் கூறியிருப்பதைப் பாருங்கள்.

“சாம்பலையும் (விபூதி) காவி வஸ்திரத்தையும் ஆபரணமாகக் கொண்டுள்ள இந்த மாமுனிவரின் திருமேனியை நான் எக்காலத்திலும் மறக்க முடியாது. ஆத்ம சக்தி என்றும், தேஜஸ் அதாவது முகத்தில் பிரகாசிக்கும் தெய்விக ஒளி என்றும் சொல்லுகிறார்கள் அல்லவா! இவை கற்பனைக்கு எட்டாத வெறும் வார்த்தைகள் என்று நான் இதுவரையில் எண்ணிக் கொண்டிருந்தேன். ஆனால் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதியைத் தரிசித்தபோதுதான் ஆத்ம சக்தியும் தெய்விக ஒளியும் சாந்தமும் மேதையும் மனித உருவத்துடன் விளங்க முடியும் என்பது எனக்குத் தெரிந்தது!” என்று பால் பிரண்டன் பரவசம் அடைந்து கூறியிருக்கிறார்.

ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் சம்ஸ்கிருதம், தமிழ், தெலுங்கு, ஆங்கிலம் முதலிய பல பாஷைகளில் தேர்ச்சி பெற்றவர்; ஞான பண்டிதர்; சகல கலா ரஸிகர்.

மாதத்தில் பல நாட்கள் தவத்திலும் உபவாசத்திலும் கழிக்கும் பரமாச்சாரிய ஸ்வாமிகள் பல நூற்றாண்டுகளாக வழக்கத்தில் இருந்து வந்த மடாதிபதிகளுக்குரிய பல சின்னங்களையும் ஆடம்பரமானவை என்று அகற்றி விட்டார்கள். பல இடங்களுக்கும் கால் நடையாகவே யாத்திரை செய்து வருகிறார்கள்; அத்தியாவசியமாக இருந்தாலன்றிப் பல்லக்கை உபயோகிப்பதில்லை.

இந்திய கலாச்சாரங்களிலும் இலக்கியங்களிலும் ஆச்சாரிய ஸ்வாமிகளுக்கு உள்ள சிரத்தையை ஓர் உதாரணத்திலிருந்து தெரிந்து கொள்ளலாம். சில மாதங்களுக்கு முன் புதுடில்லியில் ஆரம்பிக்கப்பட்ட இந்திய கலாச்சாரத் தொடர்பு மகாசபைக்கு (Indian Council of Cultural Relations) சம்ஸ்கிருதம், தமிழ், மலையாளம், தெலுங்கு, உருது, ஆங்கிலம் முதலிய பல பாஷைகளில் உள்ள நூற்றுக்கணக்கான அரிய புத்தகங்களை இலவசமாக வழங்கினார். மற்றும் பல ஸ்தாபனங்களுக்கும் ஸ்ரீ காஞ்சி காமகோடி மடத்திலிருந்து இலவசமாக ஏராளமான இலக்கிய, சமய நூல்கள் வழங்கப்பட்டிருக்கின்றன.

நாலு ஆண்டுகளுக்கு முன் பாரத நாடு சுதந்திரம் பெற்றபோது ஸ்ரீ ஆச்சாரிய ஸ்வாமிகள் அகமகிழ்ந்து பாரத மக்களுக்கு விடுத்த ஆசிச் செய்தியை யாரும் மறந்திருக்க முடியாது.

தமிழையும் சமயத்தையும் சேர்த்து வளர்ப்பதற்கு ஸ்வாமிகள் சமீப காலத்தில் ஓர் அருமையான வழியைக் கண்டு பிடித்திருக்கிறார்.

ஸ்ரீ ஆண்டாள் அருளிய திருப்பாவை, ஸ்ரீ மாணிக்கவாசகரின் மணி வாசகங்கள் அடங்கிய திருவெம்பாவை, நாயன்மார் ஆழ்வார்களின் புனித சரித்திரங்கள் முதலியவற்றின் பெருமையைக் குழந்தைகள் முதல் வயோதிகர்கள் வரையில் சகலரும் தெரிந்து ஆஸ்திக வழியைப் பின்பற்ற வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறார்.

ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகளின் கட்டளைக்கு இணங்கச் சமீப காலமாக இந்த மாகாணத்தில் உள்ள பல இடங்களிலும் திருப்பாவை திருவெம்பாவை மகாநாடுகள் நடந்து வருகின்றன.

“நமது சிறுவர்கள் ஷேக்ஸ்பியர், மில்டன் முதலிய ஆங்கிலக் கவிஞர்களின் வாழ்க்கை வரலாறுகளை நன்கு அறிந்திருக்கிறார்கள். ஆனால் நாயன்மார், ஆழ்வார்கள் முதலிய தெய்விகத் தமிழ் ஞானிகளைப் பற்றி அறிந்து கொள்வதில்லை. எனவே அரிய பெரிய தமிழ் இலக்கியங்களின் மகிமையை நமது சிறுவர்களுக்குப் போதிப்பதே நாம் அவர்களுக்குச் செய்யும் மகத்தான தொண்டு ஆகும். அந்த இலக்கியங்கள் ஆத்மார்த்தப் பொக்கிஷங்களாக விளங்குகின்றன. மேற்படி பொக்கிஷங்கள்தான் வாழ்க்கையாகிற யாத்திரையில் மக்களுக்குப் பலம் பொருந்திய உண்மையான பாதுகாப்பாக இருக்கும்.”

ஸ்ரீ ஆச்சாரிய ஸ்வாமிகள் சில தினங்களுக்கு முன் மாயூரத்தில் நாயன்மார்கள், ஆழ்வார்களின் மகிமையைப் பற்றிப் பேசியபோது மேற்கூறிய விதம் திருவாய் மலர்ந்தருளினார்.

ஸ்வாமிகளின் கட்டளைக்கிணங்க ஏராளமான ஸ்தோத்திரங்களும் உபநிடத சார நூல்களும் தெளிவான தமிழ் உரையுடன் ஸ்ரீ காஞ்சி காமகோடி கோச ஸ்தானத்திலிருந்து மிகக் குறைந்த விலையில் வெளியாகியிருக்கின்றன.

அத்தகைய மகா புருஷரின் புனிதத் திரு உருவத்தை இந்த வாரத்துக் கல்கி அட்டை பெருமையுடன் தாங்கிக் கொண்டிருக்கிறது. மேலே வட்டத்தில் சீடர்கள் புடைசூழ அமர்ந்திருப்பவர் பகவான் ஸ்ரீ ஆதிசங்கராச்சாரிய ஸ்வாமிகள்.



கல்கி

மலர் 11

தமிழ்த் திருநாடு தன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார்

இதழ் 26

# சபாஷ்! சென்னை!

நாலாபுறமிருந்தும் காங்கிரஸ் தோல்விகளைப் பற்றிய விபரீதமான செய்திகள் வந்து கொண்டிருக்கும் சமயத்தில் சென்னை நகரம் தன்னுடைய கௌரவத்தைக் காப்பாற்றிக் கொண்டிருக்கிறது. ஹார்பர் தொகுதி, திருவல்லிக்கேணி தொகுதி, மயிலாப்பூர் தொகுதி ஆகிய தொகுதிகளில் காங்கிரஸ் அபேட்சகர்கள் வெற்றி பெற்றிருக்கின்றனர். இந்தியப் பார்லிமெண்டுக்கும் காங்கிரஸ் அபேட்சகர் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டார். வெளியூர்களின் விஷயம் எப்படியிருந்தாலும் தலை நகரத்தில் மக்களின் காங்கிரஸ் பக்தி குன்றவில்லையென்று ஏற்பட்டிருக்கிறது.

மேற்கூறிய தொகுதிகளில் காங்கிரஸ் வெற்றி அடைந்ததற்கு முக்கிய காரணமானவர்கள் மத்திய வகுப்பார்தான் என்பதை நினைக்க மிக்க மகிழ்ச்சி உண்டாகிறது. மத்திய வகுப்பார் காங்கிரஸ் ஆட்சியில் பல இன்னல்களுக்கு உள்ளானவர்கள்; ஆகையால் காங்கிரஸின் பேரில் கோபம் கொள்வதற்கு அவர்களுக்குக் காரணம் இருந்தது. அவர்களில் பெரும்பாலோர் காங்கிரஸுக்கு விரோதமாக வோட்டுப் போடுவார்கள் என்று எதிர்பார்க்கப்பட்டது. முக்கியமாக, திருவல்லிக்கேணியில் சோஷலிஸ்ட் கட்சியின் சார்பாக நின்ற என். ஜி. ஓ.க்களின் மாஜி தலைவர் ஸ்ரீ ஜகதீசய்யரும் மயிலாப்பூரில் ஸ்ரீ ஏ. வி. ராமன் அவர்களும் பெருமிதமான நடுத்தர வகுப்பாரின் வோட்டுக்களைப் பெறுவார்கள் என்று கருதப்பட்டது. மக்களின் மனப்போக்கும் அப்படித்தான் இருந்ததாகத் தோன்றியது. கனம் கோபால ரெட்டியின் தோல்விச் செய்தி வெளியான அன்று ஒவ்வொரு பஸ் ஸ்டாண்டிலும் நின்றவர்கள், "பஸ்ஸில் இடம் இல்லாவிட்டால் நடந்து போகட்டும் என்று சொன்னாரே, அந்த மகானுபாவர் தோற்றுப் போனாரா?" என்று பேசிக் கொண்டார்கள். துரதிர்ஷ்டவசமாக யோசனையின்றிக் கூறிய அவ்வார்த்தைகள் மக்களின் மனதில் எவ்வளவு ஆழமாகப் பதிந்து துன்புறுத்தி யிருந்தது என்பது அன்று வெளியாயிற்று.

ஆயினும் தேர்தலுக்கு இரண்டு மூன்று நாளைக்கு முன்பிருந்து மத்திய வகுப்பாரின் மனோபாவத்தில் ஒரு மாறுதலைக் கண்டோம். "நாடு சுதந்திரம் அடையக் காரணமாயிருந்தவர்கள் நாம்; அந்தச் சுதந்திரம் பறிபோவதற்கு நாம் காரணமாகக் கூடாது" என்று தேறித் தெளிந்தார்கள். மத்திய வகுப்பாரில் மிகப் பெரும்பாலோர் காங்கிரஸ் அபேட்சகர்களுக்கே தங்கள் வோட்டுக்களைக் கொடுத்தார்கள்.

ஹார்பர் தொகுதியில் ஸ்ரீ டி. பிரகாசம் டெபாஸிட் போகும்படியான படுதோல்வியடைந்தார். மயிலாப்பூரில் காங்கிரஸ் அபேட்சகரை எதிர்த்த அவ்வளவு அபேட்சகர்களும் டெபாஸிட்டுக்களைப் பறி கொடுத்தார்கள்.

இந்தத் தொகுதிகளில் ஏற்பட்ட வெற்றிக்கு ஆங்காங்குள்ள காங்கிரஸ் அபிமானிகள் வெகுவாகப் பாடுபட்டார்கள். பெண் தொண்டர்கள் பலர் அபாரமான வேலை செய்து வந்தார்கள். நாள் தவறாமல் காங்கிரஸ் பிரசாரக் கூட்டங்கள் நடந்தன. பிரசாரம் எவ்வளவு பலனளிக்கக் கூடும் என்பதை இந்தத் தொகுதிகளில் பிரத்தியட்சமாகக் கண்டோம்.

வெற்றியடைந்த அபேட்சகர்களான ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரி, டாக்டர் யூ. கிருஷ்ணா ராவ், ஸ்ரீ ஏ. எம். சம்பந்தம், ஸ்ரீ சி. ராஜம் ராமஸ்வாமி ஆகியவர்களுக்கு வாழ்த்துக் கூறுகிறோம்.

காங்கிரஸ் வெற்றிக்குப் பாடுபட்டு உழைத்த தொண்டர்கள் அனைவரையும் வாழ்த்துகிறோம்.

காங்கிரஸுக்கும் இம்மாகாணத்தில் ஸ்திரமான நல்லரசாட்சி ஏற்படுவதற்கும் வோட்டளித்த வாக்காளர்களைப் பெரிதும் பாராட்டுகிறோம். முக்கியமாக, மத்திய வகுப்பைச் சேர்ந்த வோட்டர்களுக்கு நாட்டின் சார்பாக மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# தோல்வியும் வெற்றியாகலாம்

முன்னர் இரண்டு தடவைகளில் நடந்த பொதுத் தேர்தல்களில் சென்னை மாகாணம் இந்தியா தேசத்தின் கவனத்தைக் கவர்ந்தது. 1937-ம் ஆண்டில் நடந்த பொதுத் தேர்தலில் சென்னையில் காங்கிரஸ் மகோன்னதமான வெற்றி அடைந்தது. 1945-ம் ஆண்டில் நடந்த தேர்தலில் சென்னையில் காங்கிரஸ் அடைந்த வெற்றி தேசத்தையே பிரமிக்கச் செய்தது. காங்கிரஸ் சார்பாக நிறுத்தப்பட்ட அபேட்சகர்களில் ஒரே ஒருவர்—அதுவும் வர்த்தகத் தொகுதியில் நிறுத்தப்பட்டவர்—சில வோட்டுக்களினால் தோற்றார். மற்ற அனைவரும் வெற்றியடைந்தார்கள். அற்ப சொற்பமான வெற்றியல்ல; இமயமலையையொத்த வெற்றி. அநேக ஸ்தானங்கள் போட்டியில்லாமலே காங்கிரஸுக்குக் கிடைத்து விட்டன. போட்டி நடந்த ஸ்தானங்களில் எதிரிகள் டெபாஸிட்டுகளை இழந்து படுதோல்வி அடைந்தார்கள்.

அப்படிப்பட்ட சென்னை மாகாணம் இந்தப் பொதுத் தேர்தலிலும் இந்தியா தேசத்தின் கவனத்தைக் கவர்ந்து விட்டது; ஆனால் வேறு விதத்தில் கவர்ந்திருக்கிறது. அதாவது இந்தியா தேசத்திலேயே காங்கிரஸ் பெருந் தோல்வி அடைந்த மாகாணம் சென்னை மாகாணம் என்ற பெயருக்கு விண்ணப்பம் போட்டிருக்கிறது. இது இந்த மாகாணத்தின் துரதிர்ஷ்டம்; இம் மாகாணத்திலுள்ள தேச பக்தர்கள் எல்லாரும் வருந்திக் கண்ணீர் வடிக்க வேண்டிய துரதிர்ஷ்டம்.

ஆனால் சிற்சில சந்தர்ப்பங்களில் தோல்வியினாலும் நன்மை ஏற்படக் கூடும்; தோல்வியே அதிசீக்கிரத்தில் வெற்றியாகவும் மாறக்கூடும். தோல்வியின் காரணங்களை நாம் நன்கு அறிந்து கொண்டு அவற்றைப் போக்கத் தக்க நடவடிக்கைகளையும் மேற்கொண்டால் தோல்வியையே அதிவிரைவில் வெற்றியாக்கிக் கொள்ளலாம்.

அதற்குரிய வழிகளை இப்போது இம்மாகாணத்திலுள்ள தேச பக்தர்களும் காங்கிரஸ் அபிமானிகளும் தேடவேண்டும். அதிகமான மனச் சோர்வுக்கும் இடம் கொடுத்துவிடக் கூடாது; அதே சமயத்தில் போலிக் காரணங்களைக் கண்டு பிடித்து நம்மை நாமே ஏமாற்றிக் கொள்ளவும் கூடாது.

* * *

இந்தப் பொதுத் தேர்தலில் இம் மாகாண வோட்டர்களின் தீர்ப்பு தவறாகப் போய்விட்டது என்பதில் சந்தேகமில்லை. ஆனால் அந்தத் தவறை மாற்ற வேண்டுமானால் அந்த வோட்டர்களைக் கொண்டுதான் மாற்ற வேண்டும்; வேறு வழியில்லை. ஆகையால் தீர்ப்பு ஏன் தவறாகப் போயிற்று என்பதைக் கண்டுபிடிக்க வேண்டும்.

"வயது வந்தவர்களுக் கெல்லாம் வோட்டுக் கொடுத்தது தவறு; அவசரப்பட்டுச் செய்த காரியம்" என்று சொல்லலாம். மதுவிலக்கை மக்கள் விரும்பவில்லை என்று கூறலாம். மழையின்மை, பஞ்சம், பட்டினி, ரேஷன்—இவற்றின் மீதும் பாரத்தைப் போடலாம். ஆனால் இந்தக் காரணங்களெல்லாம் பம்பாய் மாகாணத்துக்கும் பொருத்தமானவை. ஆனால் அம்மாகாணத்தில் ஏன் காங்கிரஸ் அபரிமித வெற்றி அடைந்தது! முன்னம் நடந்த பொதுத் தேர்தல்களில் பம்பாயில் பாதிக்குக் கொஞ்சம் அதிகமான ஸ்தானங்கள்தான் காங்கிரஸுக்குக் கிடைத்தன. இம்முறை மிகப் பெரும்பாலான ஸ்தானங்கள் எப்படிக் கிடைத்தன! ஸோஷலிஸ்ட் தலைவர் அசோக் மேதா, கம்யூனிஸ்ட் தலைவர் டாங்கே, ஷெட்யூல்ட் வகுப்புத் தலைவர் டாக்டர் அம்பேத்கார் முதலிய பெரிய கைகள் எல்லாம் விழுந்தது ஏன்!

ஆகையால் தென்னிந்தியாவில் காங்கிரஸின் தோல்விக்கு உண்மையான காரணங்கள் என்ன வென்று ஆராய்ந்து கண்டு பிடிக்க வேண்டும். சர்வஜன வாக்குரிமையையும், மதுவிலக்கு முதலிய காங்கிரஸ் திட்டங்களையும் குறை சொல்லுவது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும்.

* * *

ஆந்திர தேசத்தில் காங்கிரஸ் படுதோல்வி அடைந்திருக்கிறது.

தமிழ் நாட்டில் அவ்வளவு மோசமான தோல்வி காங்கிரஸ் அடையவில்லை.

ஆனால் சிறிது ஆராய்ந்து பார்த்தால் ஆந்திர நாட்டுத் தோல்வியைவிடத் தமிழ்நாட்டுத் தோல்விதான் அபாயகரமானது என்பதை அறியலாம்.

ஆந்திர தேசத்துத் தோல்விக்கு முக்கிய காரணம் ஆந்திர காங்கிரஸ் வாதிகளிடையே ஏற்பட்ட பிளவுகள்தான். காங்கிரஸ் சார்பான வோட்டுக்களைப் பல தொகுதிகளில் காங்கிரஸ் அபேட்சகர்களும், பிரகாசத்தின் பிரஜா கட்சி அபேட்சகர்களும், ரங்காவின் கிருஷிக் லோக் கட்சி அபேட்சகர்களும் பங்கு போட்டுக் கொண்டிருக்கிறார்கள். ஆகவே, கம்யூனிஸ்ட் அபேட்சகர்களும் சுயேச்சை அபேட்சகர்களும் அதிக வோட்டுக்களைப் பெற்று வெற்றி அடைந்திருக்கிறார்கள். காங்கிரசுக்கும், பிரகாசம் கட்சிக்கும், ரங்கா கட்சிக்கும் விழுந்த வோட்டுக்களைச் சேர்த்துக் கணக்கிட்டால் வெற்றி பெற்ற கம்யூனிஸ்ட் அல்லது சுயேச்சை அபேட்சகரின் வோட்டுக்களைக் காட்டிலும் அதிகமாயிருக்கின்றன. ஆதலின் ஆந்திர தேசத்தில் காங்கிரஸின் படுமோசமான தோல்விக்குக் காரணம் காங்கிரஸ் வாதிகளுக்குள் ஏற்பட்ட படுமோசமான பிளவுகள்தான். இந்தப் பிளவுகளுக்கும் இவற்றின் பயனாக ஏற்பட்ட படுதோல்விகளுக்கும் பொறுப்பை மந்திரிமார்கள் கோஷ்டியும், பிரகாசம் கோஷ்டியும், ரங்கா கோஷ்டியும் சரிசமானமாகப் பங்கிட்டுக் கொள்ள வேண்டும். பிளவு பட்ட ஆந்திர காங்கிரஸ் கோஷ்டிகளின் தலைவர்கள் மூன்று பேரும் (பிரகாசமும், ரங்காவும், சஞ்சீவி ரெட்டியும்) இத் தேர்தலில் தோற்றுப் போனார்கள். மூன்று ஆந்திர மந்திரிகளும் தோற்றுப் போனார்கள்.

பின்னால் ஏற்படக் கூடிய பலாபலன்களை அறியாமல் அரசியல் வாதிகள் இவ்வளவு குருட்டுத்தனமான காரியங்களைச் செய்ததற்கு அரசியல் சரித்திரத்திலேயே இதைப் போல் ஓர் உதாரணம் கண்டு பிடிப்பது கஷ்டமாயிருக்கும். ஆந்திரத் தலைவர்கள் தங்கள் மௌடீகத்தை இப்போதாவது உணர்ந்தால் விமோசனத்திற்கு வழி உண்டு.

* * *

ஆந்திர நாட்டுக் காங்கிரஸ் தோல்வியைக் காட்டிலும் எண்ணிக்கை அளவில் தமிழ் நாட்டில் தோல்விகள் குறைவுதான். ஆனால் அபாயம் இங்கே அதிகம் என்று சொன்னோம்.

எப்படி யென்றால், தமிழ்நாட்டில் காங்கிரஸ் பிரமுகர்கள் ஒருவாறு தங்களுக்குள் வித்தியாசங்களைத் தேர்தலைப் பொறுத்தவரையில் சரிப்படுத்திக் கொண்டார்கள். காங்கிரஸ் வாதிகளுக்குள் இத் தேர்தலின்போது பெரும் பிளவு எதுவும் ஏற்பட்டிருக்கவில்லை. தேர்தல் கமிட்டியில் இரு

தரப்பாரும் இடம் பெற்றிருந்தார்கள். ஏகமனதாகவே அபேட்சகர்களைச் சிபார்சு செய்தார்கள்.

ஸ்ரீ சி. பி. சுப்பையா "இம் மாகாணத்துச் சட்ட சபையிலுள்ள 375 ஸ்தானங்களில் 350 ஸ்தானங்கள் காங்கிரஸுக்குக் கிடைத்துவிடும்'' என்ற நம்பிக்கையைத் தேர்தலுக்கு முன்பு வெளியிட்டார். போகக் கூடிய 25 ஸ்தானங்களும் ஆந்திர நாட்டிலேதான் போகும் என்று நினைத்தார்.

மற்றத் தேர்தல் கமிட்டி அங்கத்தினரும் காங்கிரஸ் தமிழ் நாட்டில் மகத்தான வெற்றி அடையும் என்பதில் தங்கள் பூரண நம்பிக்கையை அடிக்கடி வெளியிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் எதிர்பார்த்தபடி நடக்கவில்லை.

பல இடங்களில் காங்கிரஸ் அபேட்சகர்கள் தோல்வி அடைந்து விட்டார்கள். அவர்களுடைய தோல்வியில் முக்கியமாகக் கவனிக்க வேண்டிய அம்சம் என்னவென்றால், ஆந்திர நாட்டைப் போல் காங்கிரஸ் வாதிகளுக்குள் ஏற்பட்ட பிளவினால் தோல்வி ஏற்படவில்லை. காங்கிரஸின் எதிரிகளும் தேச சுதந்திரத்தின் விரோதிகளும் பெருவாரியான வோட்டுக்கள் பெற்றுக் காங்கிரஸ் வாதிகளைத் தோற்கடித்திருக்கிறார்கள். வகுப்பு வாதிகளும், முஸ்லிம் லீகர்களும் கூட வெற்றியடைந்திருக்கிறார்கள். இதிலிருந்து தமிழ் நாட்டில் காங்கிரஸின் அடிப்படையே கலகலத்துவிட்டதோ என்று அஞ்ச வேண்டியிருக்கிறது. மக்களின் காங்கிரஸ் அபிமானமே குன்றிப் போயிருக்கிறது. இதன் காரணங்களை நன்கு ஆராய வேண்டும். ஆராய்ந்து அவற்றைப் போக்குவதற்குரிய முறைகளைத் தீவிரமாகக் கையாள வேண்டும். இல்லாவிடில் ஆந்திர நாட்டைக் காட்டிலும் தமிழ் நாட்டின் சீர்குலைவு அதிகமாயிருக்கும்.

* * *

தமிழ் நாட்டில் காங்கிரஸ் தோல்வியின் காரணங்களில் முக்கியமான சிலவற்றை இங்கே குறிப்பிட விரும்புகிறோம். பழைய குப்பைகளைக் கிளற நாம் விரும்பவில்லை. எனினும் இரண்டொரு பழைய விஷயங்களை ஞாபகப் படுத்திக் கொள்ளாவிட்டால், இனிமேல் செய்ய வேண்டிய காரியங்களைச் சரியாகச் செய்ய முடியாது.

1. ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னால் தமிழ் மக்கள் தேசத் தலைவர்களிடம் அளவற்ற பக்தி கொண்டிருந்தனர். காங்கிரஸ் மகாசபையினிடமும் அவர்களுடைய அபிமானம் தலைசிறந்து விளங்கியது. காங்கிரஸ்காரர்கள் என்றாலே ஒரு தனிப்பட்ட மரியாதை மக்களின் மனதில் குடி கொண்டிருந்தது.

திருப்பரங்குன்றம் மகாநாடு அதற்கெல்லாம் வேறு தேடிக் கேடு விளைத்தது. நம்மில் மிகப் பெரியவரையும் தூய்மையில் சிறந்தவரையும் காங்கிரஸ் வாதிகளே தாக்கினார்கள்; நாக்கில் நரம்பின்றிப் பேசினார்கள். அதன் பலன் நாளுக்கு நாள் விபரீதமாகி வந்து மக்களுக்கு எந்தக் காங்கிரஸ் தலைவரிடமும் மதிப்பில்லாமல் போய்விட்டது. அதுமுதல், யாரைப்பற்றி என்ன அவதூறு சொன்னாலும் நம்பும் மனப்பான்மை ஜனங்களிடம் குடிகொண்டு விட்டது.

அடுத்தபடியாக, சென்னைச் சட்ட சபையில் பெரும்பான்மையாக வந்த காங்கிரஸ் கட்சிக்கு இன்னாரைத் தலைவராக எடுக்க வேண்டும் என்று காங்கிரஸ் மேலிடம் கட்டளை அனுப்பினார்கள். அதைக் காங்கிரஸ் எம். எல். ஏ.க்களில் பெரும்பாலோர் புறக்கணித்து விட்டு ஸ்ரீ டி. பிரகாசத்தைத் தலைவராகத் தேர்ந்தெடுத்தார்கள். காங்கிரஸ் பிரதிநிதிகளே காங்கிரஸ் தலைவர்களின் கட்டளையைப் புறக்கணித்து வழி காட்டிய பிறகு, ஜனங்களின் காங்கிரஸ் அபிமானம் எப்படி நிலைத்து நிற்க முடியும்? அதுவும் கலகலத்து விட்டது.

திருப்பரங்குன்றம் பரம்பரை மேலும் தமிழ் நாட்டில் தொடர்ந்து வந்திருக்கிறது. தலைவர்களை ஊழியர்கள் காலை வாரி விடுவது சகஜமாகி விட்டது. கோஷ்டிப் பூசல் காரணமாகத் தஞ்சை ஜில்லா முதலிய இடங்களில் காங்கிரஸ் கமிட்டிகளே ஏற்படவில்லை. ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், ஸ்ரீ ஏ. வேதரத்தினம்போன்ற தேச பக்தர்கள் பலர் மனம் வெறுத்து விலகிநிற்கவும் நிர்மானித்தார்கள்.

வருங்காலத்துக்கு இது ஒரு படிப்பினையாக இருக்க வேண்டும். காங்கிரஸ் வாதிகளுக்குள் ஒற்றுமை குன்றினால் காங்கிரஸ் எதிர்ப்புச் சக்திகளுக்குத்தான் அநுகூலம் என்பதைக் காங்கிரஸ்காரர்கள் அனைவரும் நன்கு உணர வேண்டும்.

2. சென்ற ஐந்து வருஷ காலத்தில் காங்கிரஸ் நிர்வாகத்தாரும் சரி, காங்கிரஸ் மந்திரிகளும் சரி, பொதுமக்களிடம் இடைவிடாத தொடர்புகொண்டிருக்க வேண்டிய அவசியத்தை உணரவில்லை.

காங்கிரஸ் பிரசார இயந்திரத்தைத் துருப் பிடிக்க வைத்து விட்டார்கள்.

தமிழ் நாட்டில் தேசபக்திக்குப் பெயர்போன சில இடங்களில் தேர்தல் பொதுக் கூட்டம் முதன் முதலில் கூட்டிய போது, அந்த ஊர்த் தேசபக்தர்கள், "ஐயா! இவ்வூரில் காங்கிரஸ் பொதுக் கூட்டம் நடந்து நாலு வருஷங்களுக்கு மேலாகி விட்டது. தேர்தல் நெருங்கியதும் கூட்டம் போட வந்து விட்டீர்கள். பொது ஜனங்கள் இப்போது எப்படிக் காங்கிரஸ் கூட்டத்துக்கு வருவார்கள்!'' என்று கேட்டார்கள்.

மற்ற மாகாண காங்கிரஸ் மந்திரி சபைகளைக் காட்டிலும் சென்னை மாகாண மந்திரிசபை நல்ல வேலை செய்து வந்திருக்கிறது; பண்டித ஜவாஹர்லால் நேரு முதலியவர்கள் இதை உணர்ந்து பாராட்டியிருக்கிறார்கள்.

ஆனால் மந்திரி சபை செய்துள்ள வேலைகளைத் தமிழ்நாட்டுப் பொது மக்களிடையே எடுத்துச் சொல்லத் தவறி விட்டார்கள்.

காங்கிரஸ் வாதிகள் பிரசார வேலையில் எவ்வளவுக் கெவ்வளவு அசட்டையாயிருந்தார்களோ, அவ்வளவுக்கு எதிர்க் கட்சிக்காரர்கள் இடைவிடாத தீவிரப் பிரசாரம் காங்கிரசுக்கு விரோதமாகச் செய்து வந்தார்கள்.

முக்கியமாக, திராவிடக் கழகத்தைச் சேர்ந்தவர்கள் சென்ற ஐந்தாறு வருஷ காலத்தில் காங்கிரசுக்கு எதிராகத் தமிழ் நாட்டில் செய்து வந்திருக்கும் பிரசாரம் அபாரமானது.

பொது மேடைகளிலும், நாடக மேடைகளிலும், ஸினிமாத் திரைகளிலும், பத்திரிகைகளிலும், பள்ளிக் கூடங்களிலும், பாடப் புத்தகங்களிலும் திராவிடக் கழகத்தார் தேச விரோதமான பிரசாரங்களைச் செய்து வந்திருக்கிறார்கள்.

அவற்றைத் தடுப்பதற்கோ, மாற்றுப் பிரசாரம் செய்வதற்கோ, காங்கிரஸ் நிர்வாகிகள் எவ்வித முயற்சியும் செய்யவில்லை.

''இவர்கள் பிரசாரம் நம்மை என்ன செய்துவிடும்!'' என்ற அலட்சிய மனப்பான்மையுடன் இருந்து விட்டார்கள்.

ஸ்ரீ சிவஞான கிராமணியார் சென்ற ஓராண்டு காலமாக தமிழரசுக் கழகம், திராவிடக் கழக எதிர்ப்பு முன்னணி என்ற பெயர்களில் தமது சகாக்கள் சிலருடன் திராவிடக் கழகப் பிரசாரத்தை எதிர்த்துப் போராடி வந்தார். மற்றப்படி காங்கிரஸ் பிரசாரம் எதுவும் நடக்கவில்லை.

தேர்தல் நெருங்கிய சமயத்தில் ஸ்ரீ கிராமணி போன்றவர்களுக்கு "அங்கே ஓடுங்கள்!" "இங்கே வாருங்கள்!" என்று அழைப்புத் தந்திகள் வந்து குவிந்து கொண்டிருந்தன. என்ன பயன்! ஐந்து வருஷங்களில் எதிரிகள் பரப்பிய பொய்ப் பிரசாரங்களை ஒரு மாதத்தில் எப்படிச் சமாளிக்க முடியும்! யார்தான் என்ன செய்ய முடியும்!

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் காங்கிரஸ் திட்டங்களைப் பிரசாரம் செய்வதற்கே அமைத்தது போன்ற "நல்ல தம்பி" என்ற அருமையான படத்தை எடுத்தார். துவேஷப் பிரசாரப் படங்கள் நாட்டில் அபரிமிதமாகப் பெருகி வந்த காலத்தில் "நல்ல தம்பி" படம் தமிழ் நாட்டுக்கு ஒரு பெரிய சேவையாயிருந்தது. ஆனால் காங்கிரஸ் நிர்வாகிகளோ, காங்கிரஸ் சர்க்காரோ அந்த அரிய சேவைக்கு எவ்வித ஆதரவும் நல்கவில்லை.

பிரசார சக்தியைக் காங்கிரஸ் பயன்படுத்திக் கொள்ளாததற்கு இது போன்ற பல உதாரணங்களைச் சொல்லலாம்.

பொதுஜனத் தொடர்பை அலட்சியம் செய்தது தமிழ் நாட்டுக் காங்கிரஸ் நிர்வாகத்தின் பெருங் குற்றமாகும். அதன் பலனை இப் பொதுத் தேர்தலில் நன்கு காண்கிறோம்.

3. ஜனநாயகத்தின் கீழ் ஆளும் பொறுப்பை வகிக்கும் மந்திரிகள் நேர்மையாக நடந்து கொள்ள வேண்டியது அவசியம். அது மட்டும் போதாது. மந்திரிகள் நேர்மையைக் கடைப் பிடிக்கிறார்கள் என்பதை மக்கள் ஐயமற நம்பும்படியாகவும் நடந்து கொள்ள வேண்டும்.

இதில் நம் மந்திரிகள் சிலர் தவறி விட்டார்கள். நிதி மந்திரி கனம் கோபால ரெட்டியாரின் நெருங்கிய உறவினர் சம்பந்தப்பட்ட கம்பெனிக்குப் பெருந் தொகை சர்க்கார் கடன் கொடுக்கப்பட்டதாக இரண்டு வருஷங்களுக்கு முன்பு ஒரு புகார் கிளம்பியது.

"இந்தப் புகாரை அலட்சியம் செய்யக் கூடாது. அது பொய் என்றால், பொய் என்று சொல்ல வேண்டும். உண்மை என்றால், அதில் முறைத் தவறு ஒன்றுமில்லை என்பதை எடுத்துச் சொல்ல வேண்டும். தவறு யிருந்தால் திருத்திக் கொள்ள வேண்டும்" என்று நாம் முறையிட்டு எழுதியிருந்தது நேயர்களுக்கு நினைவிருக்கும்.

எனினும், பல மாதங்களுக்கு அதைப் பற்றி மந்திரிகள் வாயைத் திறக்கவில்லை.

ஸ்ரீ பிரகாசம் குற்றச் சாட்டுதல் செய்த பிறகு, மேலிடத்தாரின் விசாரணை நடந்து அறிக்கையும் பிறந்தது. வெகு காலத்துக்குப் பிறகு வந்தபடியால், அந்த அறிக்கையினால் பலன் ஏற்படவில்லை. 'மழுப்பல்' என்று ஜனங்கள் நம்பும்படி ஆயிற்று.

அவநம்பிக்கை ஒரு தடவை மக்களின் மனதில் குடிகொண்ட பிறகு எதை வேணுமானாலும் ஜனங்கள் நம்பத் தயாராகி விடுகிறார்கள்.

உதாரணமாக, இப்போதுத் தேர்தலில் கனம் பக்தவத்ஸலத்தை எதிர்த்துப் பிரசாரம் செய்தவர்கள் "பத்து லட்சம் பக்தவத்ஸலம்" என்று கூசாமல் பிரசாரம் செய்திருக்கிறார்கள். இது பயங்கரமான பொய்; கொடுமையான அவதூறு. ஆயினும் இதை நம்பிய வோட்டர்களும் உண்டு என்று அறிகிறோம். "பக்தவத்ஸலத்துக்கு வோட்டுப் போடுங்கள்" என்று பொன்னேரித் தொகுதியில் கேட்டபோது, ஒரு வோட்டர் "பக்தவத்ஸலம்தான் பத்து லட்சம் ரூபாய் சேர்த்து விட்டாராமே! அடுத்த தடவை வேறொருவர்தான் லாபம் அடையட்டுமே!" என்றாராம்.

இம்மாதிரி அவதூறான பச்சைப் பொய்களையெல்லாம் இத்தேர்தல் பிரசாரத்தில் காங்கிரஸ் எதிரிகள் கையாண்டு ஓரளவு வெற்றியும் அடைந்திருக்கிறார்கள்.

இத்தகைய பொய்ப் பிரசாரம் தமிழ் இனத்துக்கே அவமானம் தரத்தக்க விஷயந்தான்.

காங்கிரஸ் நிர்வாகிகளின் அசட்டைக் குணம் இம்மாதிரி பொய்ப் பிரசாரங்களுக்கு இடம் கொடுத்து விட்டது என்பதையும் வருத்தத்துடன் குறிப்பிட வேண்டியிருக்கிறது.

* * *

இந்தப் பொதுத் தேர்தலில் காங்கிரஸ் அடைந்திருக்கும் தோல்விக்கு இன்னும் பல சில்லறைக் காரணங்கள் இருக்கின்றன. உதாரணமாக, காங்கிரஸ் அபேட்சகர்களைப் பொறுக்கிய விதம் நூற்றுக்கு நூறு திருப்திகரம் என்று சொல்ல முடியாது. உத்தியோக வர்க்கத்தாரில் ஒரு பெரும் பகுதியார் காங்கிரஸுக்கு விரோதமாக நெடுகிலும் நடந்து வந்திருக்கிறார்கள். ஆனால் எல்லாவற்றிலும் முக்கியமான காரணங்கள் காங்கிரஸ் வாதிகள் தங்களுக்குள் போட்டுக் கொண்ட கோஷ்டிச் சண்டைகளும் பொதுஜனத் தொடர்பை நெடுகிலும் அசட்டை செய்து வந்ததுமே யாகும்.

இப்போது கூட ஒன்றும் முழுகிப் போய் விடவில்லை. தமிழ்நாட்டிற்குரிய ஸ்தானங்களில் பெரும்பான்மை ஸ்தானங்களைக் காங்கிரஸ் அடையும் என்று எதிர்பார்க்கிறோம். சென்னை இராஜ்ய சட்ட சபையில் காங்கிரஸ் பெரும்பான்மை பெறாவிட்டாலும் அதிக பலம் பொருந்திய தனிப்பட்ட கட்சியாக இருக்கும். இந்த பலத்தை மேலும் மேலும் வளர்த்துக் கொள்ள வேண்டும். காங்கிரஸின் செல்வாக்கைப் பெருக்கிக் கொள்ள வேண்டும். இதற்கு வழி காங்கிரஸ் வாதிகள் அனைவரும் ஆத்ம பரிசோதனை செய்துகொண்டு தத்தம் குறைகளை நீக்கிக் கொண்டு ஒற்றுமைப்பட்டு ஒரு முகமாக வேலை செய்வதுதான்.

முக்கியமாக இந்தத் தேர்தலில் வெற்றி பெற்ற காங்கிரஸ்வாதிகள் தோல்வியடைந்தவர்களை அலட்சியம் செய்யக் கூடாது. "அவர்கள் வராதது நல்லதாய்ப் போயிற்று" என்ற எண்ணம் மனதின் அந்தரங்கத்திலேகூட இருக்கக்கூடாது. அந்த எண்ணம் தற்கொலைக்கு ஒப்பாகும். தோற்றவர்கள் அனைவரும் தங்கள் சொந்தத் தகுதியின்மையால் தோற்றுவிடவில்லை. காங்கிரஸின் எதிர்ப்புச் சக்திகள் மேற்படி தொகுதிகளில் தீவிரமாக வேலை செய்திருப்பதினாலேதான் தோற்றார்கள். ஆகையால் தோற்றவர்களைக் குறை கூறுவது பெரும் அநீதியாகும்.

ஜயித்தவர்கள், தோற்றவர்கள், தேர்தலுக்கு நிற்காதவர்கள், காங்கிரஸிலிருந்து விலகி நின்றவர்கள் ஆகிய எல்லாரும் ஒன்று பட்டுக் காங்கிரஸுக்குப் புத்துயிர் கொடுக்கும் வழிகளைத் தேட வேண்டும். கோஷ்டி மனப்பான்மையை அடியோடு விட்டொழித்து விட வேண்டும். தங்களுக்குப் பிடிக்காதவர்களையெல்லாம் தள்ளிவிட்டுக் காங்கிரஸை நடத்தலாம் என்ற எண்ணம் யாருக்காவது முன்னம் இருந்திருந்தால், அதை இப்போதாவது விட்டொழிக்க வேண்டும். உண்மையான காங்கிரஸ்வாதிகள் அனைவரும் கோஷ்டி மனப்பான்மையின்றி ஒற்றுமைப்பட்டு வேலை செய்தால்தான் காங்கிரஸின் எதிர்ப்புச் சக்திகளுடன் போராடி வெற்றி கொள்ள முடியும். அவ்வாறு ஒற்றுமையுடன் வேலை செய்தால் இந்தத் தோல்வியையே வெகு சீக்கிரத்தில் வெற்றியாகச் செய்து கொள்ளலாம். ஐந்தாறு வருஷங்களுக்கு முன்னால் தென்னிந்தியாவில் காங்கிரஸ் அடைந்திருந்த மகோன்னத நிலையை மறுபடியும் அடையலாம்.

# பொன்னியின் செல்வன்

## கல்கி

மூன்றாம் அத்தியாயம்

## ஆந்தையின் குரல்

நந்தினி கடலை நோக்கினாள். பழுவேட்டரையர் ஏறிச் சென்ற படகு பார்த்திபேந்திரனுடைய கப்பலை நெருங்கிக் கொண்டிருந்தது.

நந்தினி பெருமூச்சு விட்டாள். அது பார்த்திபேந்திரனுடைய நெஞ்சில் புயலாக அடித்தது.

"தேவி! சொல்லுங்கள். நான் செய்ய வேண்டியது இன்னதென்று சொல்லுங்கள். தங்களுக்கும் எனக்கும் உகந்தது என்று பிரித்துச் சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. தங்களுக்கு எது உகந்ததோ அதுதான் எனக்கும் உகந்தது!" என்றான் பல்லவ வீரன்.

அவன் மனதில் விசித்திரமான எண்ணங்கள் எல்லாம் அந்நேரத்தில் உதித்தன. இந்தப் பெண் அந்தக் கொடிய கிழவனிடம் அகப்பட்டுக் கொண்டு கூண்டுக் கிளியைப் போல் தவித்துக் கொண்டிருக்கிறாள் என்பதில் சந்தேகமில்லை. அந்தக் காட்டுப் பூனையிடமிருந்து இவளை ஏன் விடுதலை செய்யக் கூடாது? இவள் மட்டும் தன் விருப்பத்தைத் தெரிவிக்கட்டும்! அவனை அக்கப்பலிலேயே சிறைப்படுத்திக் கண் காணாத தேசத்துக்குக் கொண்டு போய்விட்டு விடச் செய்யலாம்! சண்டாளன்! புதல்வியும் பேத்தியுமாக இருப்பதற்குரிய இளம் பிராயமுடைய பெண்ணை மனைவியாக்கிக் கொள்ள எப்படி இவன் மனந் துணிந்தது?...

நந்தினி இன்னமும் படகையும் கப்பலையும் பார்த்துக் கொண்டிருந்தாள். படகிலிருந்து பழுவேட்டரையர் கப்பலில் ஏறுவதைப் பார்த்தாள்.

"நல்ல வேளை! பத்திரமாக ஏறி விட்டார்! எவ்வளவு வீரராயிருந்தாலும் வயதாகி விட்ட தல்லவா? படகிலிருந்து கப்பலில் ஏறும் போது தடுமாறாமல் இருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலையாயிருந்தது!" என்றாள்.

பல்லவன் ஏமாற்றமடைந்தான். கிழவனிடம் இவளுக்கு இவ்வளவு பரிவு ஏன்? படகிலிருந்து அவன் கடலில் விழுந்து இறந்தால்தான் என்ன? நாட்டுக்கும் க்ஷேமம்; இவளுக்கும் விடுதலை! எதற்காக இவ்வளவு பரிவு காட்டுகிறாள்?

"கிழவருக்குச் சோழ குலத்தாரிடம் எவ்வளவு அபிமானம் என்பது இன்றைக்குத்தான் எனக்குத் தெரிந்தது. இளவரசருக்கு ஆபத்து என்றதும் எப்படித் துடிதுடித்துப் போய்விட்டார்?—ஐயா! இளவரசர் தப்பிப் பிழைத்திருக்கக்கூடும் அல்லவா? இறந்து தான் போயிருக்க வேண்டும் என்பது நிச்சயம் இல்லையே?" என்றாள் நந்தினி.

"நிச்சயம் இல்லை; ஆனால் அப்பேர்ப்பட்ட சுழற்காற்றில் கடலில் குதித்தவர் பிழைத்திருப்பது அசாத்தியம்! விதியின் போக்குக்கு நாம் என்ன செய்ய முடியும்?" என்றான் பல்லவன்.

"இதற்கு விதி காரணம் இல்லை; அந்தப் பழையாறை ராட்சஸியின் பேராசை தான் காரணம். தங்களுக்குத் தெரியுமா, ஐயா? குந்தவை தேவிக்கு ஜோதிடத்திலும் ரேகை சாஸ்திரத்திலும் அபார நம்பிக்கை. தம்பியின் ஜாதகத்தையும் கைரேகையையும் பார்த்து வைத்துக் கொண்டு அவன் மூன்று உலகையும் ஆளும் சக்கரவர்த்தியாகப் போகிறான் என்று நம்பிக்கை வைத்திருந்தாள். ஐயோ! பாவம்! அந்த அருமைத் தம்பிக்கு இந்தக் கதி நேர்ந்தது என்று அறியும் போது அவள் எவ்வளவு கஷ்டம் அடைவாள்! அச்சமயம் நான் அவள் கூட இருந்து ஆறுதல் சொல்ல வேண்டும் போலிருக்கிறது!"

இவ்விதம் கூறிய நந்தினியின் குரலில் குதூகலம் தொனித்தது. பல்லவன் ஒரு கணம் ஆச்சரியப்பட்டுப் போனான். பிறகு தன் செவிகளில் தான் கோளாறு என்று தீர்மானித்துக் கொண்டான்.

"ராணி! தாங்கள் எதற்காக ஆறுதல் சொல்ல வேண்டும்? அவளுடைய பேராசையினால் நேர்ந்து விட்ட விபரீதம் தானே இது? அதற்காக அவள் கஷ்டப்பட வேண்டியதுதான்..."

"அது எப்படி ஐயா? அவள் கண்ணில் ஒரு சொட்டுக் கண்ணீர் துளித்தால் நெஞ்சு பதறுகிறவர்கள் சோழ நாட்டில் ஆயிரம் பதினாயிரம் பேர் இருக்கிறார்கள். அவள் சக்கரவர்த்தியின் செல்வப் புதல்வி. மூன்று உலகிலும் ஈடு இணையற்ற அழகி!"

"நானும் ஒரு சமயம் அவ்வாறுதான் நினைத்திருந்தேன்; அதாவது தங்களைப் பார்ப்பதற்கு முன்னால்!"

"என்னைப் பார்த்த பிறகு என்ன நினைக்கிறீர்கள்?"

"குந்தவை தேவியின் அழகு தங்கள் பாதச் சுண்டு விரலின் அழகுக்கு இணையாகாது என்றுதான்."

"இப்போது இப்படித்தான் சொல்வீர்கள். நாளைக்கு அவளைப் பார்த்தால் நான் ஒருத்தி இவ்வுலகில் இருக்கிறேன் என்பதையே மறந்து விடுவீர்கள்!"

"ஒரு நாளும் மாட்டேன், தேவி! என்னைச் சோதனை செய்து பாருங்கள் என்றுதான் சொல்கிறேனே? தங்கள் கட்டளை இன்னதென்று இக்கணமே தெரிவியுங்கள்."

"கட்டளையிடும் பாத்தியதை எனக்குக் கிடையாது, ஐயா! விண்ணப்பம் செய்து கொள்கிறேன். பெரிய பழுவேட்டரையரை நான் மணந்த பிறகு சோழ நாட்டில் பிளவும் குழப்பமும் ஏற்பட்டிருப்பதாகச் சிலர் அவதூறு சொல்கிறார்கள். அது பொய் என்பதை நிரூபிக்க விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன்."

பார்த்திபேந்திரன் சிறிது ஏமாற்றம் அடைந்தான். நந்தினி அவனுக்காக ஏதோ ஒரு கஷ்டமான காரியத்தில் தன்னை ஏவுவாள் என்று எண்ணியிருந்தான். அதை நிறைவேற்றி அவளை மகிழ்விக்க ஆர்வம் கொண்டிருந்தான். ஆனால் அவள் இராஜ்ய காரியத்தைப் பற்றி எதுவோ சொல்கிறாள்!

"சொல்லுங்கள், ராணி! தங்கள் விருப்பம் எதுவாயிருந்தாலும் சொல்லுங்கள்!" என்றான்.

"ஐயா! சோழ நாட்டில் அமைதி ஏற்படாமல் தடுத்து வந்தவள் இளைய பிராட்டி. அவளுடைய அகம்பாவத்தினால் சோழ நாட்டுச் சிற்றரசர்களையும் பெருந்தர அதிகாரிகளையும் கோபம் கொள்ளச் செய்தாள். தம்பி அருள்மொழி வர்மனை எப்படியாவது இந்தச் சோழ நாட்டுச் சிம்மாசனத்தில் ஏற்றிவிட வேண்டும் என்று அவளுக்கு ஆசை. இதனால் சமரசம் ஏற்படாமல் தடுத்து வந்தாள். இப்போது அந்தக் காரணம் போய்விட்டது. இனிமேல் சமரசம் செய்து வைப்பது சுலபம். கேளுங்கள், ஐயா! தாங்கள் தான் சொன்னீர்களே! மந்திரிகளும் மற்றப் பெருந்தர அதிகாரிகளும் சுந்தர சோழருக்குப் பிறகு மதுராந்தகருக்குப் பட்டம் கட்ட விரும்புகிறார்கள். சக்கரவர்த்தியும் அதற்கு இணங்கி விட்டார்."

"அப்படியா, தேவி!"

"ஆம், ஐயா! இல்லாவிடில் இளவரசரைச் சிறைப்படுத்திக் கொண்டு வரக் கட்டளையிட்டிருப்பாரா? ஆனாலும் அது சரியல்ல என்பது என் கருத்து. சமரசமாகத் தீர்த்துக் கொள்வதற்கு இடம் இருக்கிறது. வெள்ளாற்றுக்கு வடக்கேயுள்ள ராஜ்யத்தை ஆதித்த கரிகாலருக்கு என்றும், தெற்கேயுள்ள பகுதியை மதுராந்தகருக்கு என்றும் பிரித்துக் கொள்ளலாமே? தங்கள் முன்னோர்கள், பல்லவ மகா சக்கரவர்த்திகள், தொண்டை மண்டலத்தை ஆள்வதுடன் திருப்தி அடையவில்லையா? பூர்வீக சோழ மன்னர்கள் இரண்டு வெள்ளாற்றுக்கு மிடையேயுள்ள இராஜ்யத்துடன் திருப்தி அடையவில்லையா?......"

"தேவி! இதையெல்லாம் எதற்காக என்னிடம் சொல்லுகிறீர்கள்? எந்த

ராஜ்யம் எப்படிப் போனால் எனக்கு என்ன? யார் எந்த ராஜ்யத்தை ஆண்டால்தான் எனக்கு என்ன?......"

"ஐயா! தாங்கள் ஆதித்த கரிகாலரிடம் உண்மை விசுவாசமுள்ள சிநேகிதர் என்று எண்ணினேன்."

"பிறருக்கு விசுவாசமாயிருந்து, பிறருடைய புகழுக்காகப் போராடி, பிறருடைய நன்மைக்காக உழைத்து,— இத்தனை நாளும் கழித்தாகி விட்டது. இனிமேல் எனக்காக நான் வாழ விரும்புகிறேன். ராணி! இதைக் கேளுங்கள்! நான் எதற்காக இவ்வுலகில் பிறந்தேன், எதற்காக உயிரோடிருக்கிறேன் என்று பல தடவை நான் சிந்தித்ததுண்டு. என் முன்னோர்களாகிய பல்லவ சக்கரவர்த்திகள் பெரிய சாம்ராஜ்யங்களை ஆண்டார்கள். மாமல்லபுரத்தைப் போன்ற சொப்பன உலகங்களைச் சிருஷ்டித்தார்கள். அவர்களுடைய பெருமையை என் காலத்தில் மீண்டும் நிலைநாட்டப் பிறந்திருக்கிறேனோ என்று நான் எண்ணியதுண்டு. ஆனால் அதில் என் மனம் ஈடுபடவில்லை; ராஜ்யங்களைச் சிருஷ்டிப்பதில் உற்சாகம் கொள்ளவில்லை. சோழ குலத்தின் பெருமைக்கு உழைப்பதிலேயே திருப்தி அடைந்தேன். ஆதித்த கரிகாலரின் சிநேகத்தில் மகிழ்ந்தேன். இப்படியே என் வாழ்நாளைக் கழித்துவிடுவது என்றுதான் எண்ணியிருந்தேன். இன்றைக்குத்தான் என் கண்கள் திறந்தன; சற்று முன்னாலேதான் நான் பிறந்தது எதற்காக என்று தெரிந்தது. அதோ கேளுங்கள்! அந்தக் கடல் அலைகளின் குரல் என் உள்ளத்தின் குரலை 'ஆம் ஆம்' என்று ஆமோதிக்கிறது. அதோ, காட்டில் வாழும் பறவைகள் எல்லாம் 'சரி சரி' என்று கூவுகின்றன. தேவி! சோழ சாம்ராஜ்யத்தைப் பங்கு போடுவது பற்றி என்னிடம் சொல்ல வேண்டாம். வேறு ஏதாவது சொல்லுங்கள்! கடல்களுக்கு அப்பாலுள்ள பவழத் தீவிலிருந்து விலை மதிக்க முடியாத பவழங்களைக் கொண்டு வரச் சொல்லுங்கள். ஆழ் கடலின் அடியிலிருந்து முத்துக்களைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மேரு மலையின் உச்சிச் சிகரத்திலே ஏறிச் சஞ்சீவி மூலிகையைக் கொண்டு வரச் சொல்லுங்கள். மேக மண்டலத்துக்கு மேலே பறந்து நட்சத்திரங்களைப் பறித்துக் கொண்டு வந்து ஆரம் தொடுத்துத் தங்கள் கழுத்தில் போடச் சொல்லுங்கள். பூரண சந்திரனைக் கொண்டு வந்து தங்களுடைய முகம் பார்க்கும் கண்ணாடியாக்கித் தரும்படி சொல்லுங்கள்!......"

"போதும், ஐயா, போதும்! என்னை ஏற்கெனவே அந்தப் பழையாறைப் பிராட்டி 'பைத்தியம்' என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள். உண்மையாகவே எனக்குப் பைத்தியம் பிடிக்கச் செய்து விடாதீர்கள்!" என்றாள் நந்தினி.

**பா**ர்த்திபேந்திரன் சிறிது வெட்கம் அடைந்தான். "பைத்தியம் பிடித்திருப்பது எனக்குத்தான்; மன்னியுங்கள். தங்களுடைய விருப்பத்தை முதலில் தெரிவியுங்கள்!" என்றான்.

"சோழ நாடெங்கும் — தமிழகமெங்கும்—எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயரைப் போக்கிக் கொள்ள விரும்புகிறேன். அதற்குத்தான் தங்கள் உதவியை நாடுகிறேன். நான் இந்தக் கிழவரை மணந்ததின் காரணமாகச் சோழ குலத்துக்கே கேடு வந்துவிட்டதென்று ஜனங்கள் பேசிக் கொள்கிறார்களாம். மதுராந்தகத் தேவரை இராஜ்ய ஆசை கொள்ளச் செய்தது நான்தான் என்று சொல்லுகிறார்களாம், சோழ நாட்டுச் சிற்றரசர்களை அவர் பக்கம் திருப்பியதும் நான்தான் என்றும் சொல்கிறார்களாம். இந்த அவப் பெயருடன் இறந்து போவதற்கு நான் விரும்பவில்லை......!"

"இறந்து போவதைப் பற்றி ஏன் பேசுகிறீர்கள்? என்னைத் துன்புறுத்துவதற்காகவா?"

"பல்லவ குமாரா! தங்களுக்கு ரேகை சாஸ்திரம் தெரியுமா? ரேகை சாஸ்திரத்தில் தங்களுக்கு நம்பிக்கை உண்டா?" என்று நந்தினி சம்பந்தமில்லாத ஒரு கேள்வியைக் கேட்டாள்.

பார்த்திபேந்திரன் அதற்கு நேர் மறுமொழி சொல்லாமல் "எங்கே? கையைக் காட்டுங்கள்!" என்றான்.

நந்தினி வலது கையை நீட்டினாள். அதைப் பார்த்திபேந்திரன் சிறிது நேரம் உற்றுப் பார்த்து விட்டு, "ஆச்சரியமான ரேகைகள்! இம்மாதிரி காண்பதே அபூர்வம்! அந்தக் கையையும் சிறிது காட்டுங்கள்!" என்றான்.

நந்தினி இன்னொரு கையையும் நீட்டினாள். பல்லவன் அதையும் பார்த்துவிட்டு, "தேவி! இதற்கு முன் யாராவது தங்கள் கரங்களின் அதிசயமான ரேகைகளைப் பார்த்து விட்டு ஏதாவது சொல்லியிருக்கிறார்களா?" என்று கேட்டான்.



"ஆம்; பழையாறை இளையபிராட்டி ஒரு தடவை என் கையைப் பார்த்து விட்டுச் சொன்னாள்......"

"என்ன சொன்னாள்?"

"நான் அற்பாயுளில் சாவேன் என்று சொன்னாள்."

"அது உண்மைதான்!" என்றான் பார்த்திபேந்திரன்.

"ஐயோ! நீங்களுமா அப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஆனால் அவள் அரை குறையாக சாஸ்திரம் படித்தவள் என்று தெரிகிறது. இந்தக் கைரேகையில் ஒன்று அற்பாயுளைக் குறிப்பது உண்மைதான். ஆனால் மற்றொரு ரேகை அந்தக் கண்டத்தைக் கடந்து புனர் ஜன்மம் ஏற்படும் என்றும் கூறுகிறது. அந்தப் புனர் ஜன்மத்துக்குப் பிறகு கடல் கடந்த பல நாடுகளுக்குப் பிரயாணம் செய்யும் பாக்கியம் உண்டு என்றும், மன்னாதி மன்னர்களுக்குக் கிட்டாத ஆனந்த வாழ்க்கை வெகு காலம் உண்டு என்றும் கூறுகிறது. இவ்வளவும் தற்செயலாகக் கடற்கரையில் சந்தித்த ஒரு யவ்வன புருஷனுடைய உண்மை அன்பினால் கிடைக்கும் என்று தெரிகிறது. தங்களுடைய சின்னஞ் சிறு விருப்பத்தை நிறைவேற்றுவதற்காக அவன் தன் உயிரையே அர்ப்பணம் செய்வான் என்று ரேகைகள் மிகத் தெளிவாகச் சொல்லுகின்றன..."

இவ்விதம் கூறிக் கொண்டே பார்த்திபேந்திரன் சட்டென்று நந்தினியின் விரித்த இரு கரங்களையும் பற்றித் தன் கண்களில் ஒற்றிக் கொண்டான்.



நந்தினி கைகளை உதறி விடுவித்துக் கொண்டு "ச்சீ! இது என்ன காரியம் செய்தீர்?" என்றாள்.

"மன்னியுங்கள்! இவை தங்கள் கரங்கள் என்பதை மறந்து விட்டேன். இரண்டு செந்தாமரை மலர்கள் என்று எண்ணிக் கொண்டேன்" என்றான்.

"பழுவேட்டரையர் பார்த்திருந்தால் உம்மை ஈட்டி முனையில் கழுவேற்றியிருப்பார்!"

"தேவி! தங்களுக்காகக் கொடுப்பதற்கு எனக்கு இருப்பது ஓர் உயிர்தானே என்று கவலைப்படுகிறேன்..."

"அந்த ஓர் உயிரையும் இப்படிக் கொடுப்பானேன்? இந்த அநாதைப் பெண்ணுக்கு உதவி செய்வதற்காகக் காப்பாற்றி வைத்துக்கொண்டிருங்கள்!"

"என்ன செய்ய வேண்டும் என்று சொல்லுங்கள்!"

"சோழ சாம்ராஜ்யம் தாயாதிக் கலகத்தினால் பாழாகிவிடாமல் காப்பாற்ற வேண்டும். அதற்குத் தங்களுடைய உதவி வேண்டும்."

"எப்படி?"

"தங்கள் சிநேகிதர் கரிகாலரைக் கடம்பூர் சம்புவரையர் விட்டுக்கு அழைத்து வாருங்கள். சம்புவரையருக்கு ஒரு பெண் இருக்கிறாள். அவளை ஆதித்த கரிகாலருக்கு மணம் செய்து வைத்துவிட்டால் என் மனோரதம் பூர்த்தி யாகும்."

"இந்த அற்பக் காரியத்துக்குத்தானா இவ்வளவு பீடிகை? ஆதித்த கரிகாலரை அவசியம் கடம்பூருக்குக் கொண்டு வந்து சேர்க்கிறேன். அப்புறம்?......"

"ஆதித்த கரிகாலருக்குச் சம்புவரையர் மகளைக் கல்யாணம் செய்து வைத்துவிட்டால் கலகம் பாதி தீர்ந்து விட்டதாகும். சோழ சாம்ராஜ்யத்தில் மதுராந்தகருக்குத் தென் பாதியும் கரிகாலருக்கு வட பாதியும் என்று பிரித்துக் கொடுத்து விட்டால் கலகம் முழுதும் தீர்ந்ததாகும்."

"பின்னர்?......"

"எனக்கு ஏற்பட்டிருக்கும் கெட்ட பெயர் போய்விடும். பிறகு என் தலைவிதியை நானே நிறைவேற்றிக் கொள்வேன். நடுக் கடலில் விழுந்து உயிரை விடுவேன்......"

"நான் பின் தொடர்ந்து வந்து தங்களைக் காப்பாற்றுவேன். நம் இருவருடைய புனர் ஜன்மம் ஆரம்பமாகும். கடல்களைக் கடந்து தூர தேசங்களுக்குச் செல்வோம். அங்கே தங்களுக்காக ஒரு மாபெரும் ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன்."

"ஐயா! இப்படி யெல்லாம் பேச வேண்டாம். தென் தமிழ் நாட்டுப் பத்தினிப் பெண்களின் மரபில் வந்தவள் நான். பழுவேட்டரையரின் தர்ம பத்தினி......"

"தேவி! என்னிடம் உண்மையைச் சொல்லுங்கள். இந்தக் கிழவரை எதற்காக மணந்து கொண்டீர்கள்? இவர் பேரில் காதல் கொண்டா? அல்லது இவருடைய பலாத்காரத்திற்காகவா?"

நந்தினி பெருமூச்சு விட்டாள். அவளுடைய கண் விழிகள் மேல் நோக்கிச் சென்றன. ஏதோ பழைய துயரமான ஞாபகங்களில் சிறிது நேரம் ஆழ்ந்திருந்தாள் என்று தோன்றியது.

"பாவம்! கிழவர் பேரில் பழி சொல்ல வேண்டாம். மனதார இஷ்டப்பட்டுத் தான் இவரை மணந்தேன்......"

"ஏன்? எதற்காக? இவரிடம் அப்படி என்ன கண்டீர்?"

"இவரிடம் ஒன்றும் காணவில்லை. அரண்மனை வாழ்வுக்கும் அதிகாரத்துக்கும் ஆசைப்பட்டு நானாகவே இவரை மணந்தேன்......"

"என்னால் நம்ப முடியவில்லை."

"நம்ப முடியாதுதான். ஆனாலும் அது உண்மை. சின்னஞ்சிறு பிராயத்திலிருந்து என்னை ஒருத்தி ஏழை என்றும் அநாதை யென்றும் ஏளனம் செய்து வந்தாள். அரச குலத்துப் பிள்ளைகளுடன் விளையாடும் உரிமைகூடக் கிடையாது என்று சொல்லி வந்தாள். அந்த அவமதிப்பைப் பொறுக்க முடியாமல் இந்தத் தவறைச் செய்தேன்."

"தேவி! அப்படித் தங்களை அவமதித்த பெண் பேய் யார்?"

"தெரியவில்லையா? ஊகிக்க முடியவில்லையா?"

"இளைய பிராட்டி குந்தவைதானே?"

"ஆமாம்."

"அவளுக்கு ஒரு நாள் நான் புத்தி புகட்டியே தீர்வேன்."

"கடவுளே அவளுக்குத் தண்டனை அளித்து விட்டார். அருமைத் தம்பியும் ஆருயிர்க் காதலனும் ஒரே போக்கில் போய் விட்டார்கள். இப்போது அவளுடைய நிலையை நினைத்தால் எனக்கு அநுதாபமா யிருக்கிறது."

"இந்தத் தண்டனை அந்த அகம்பாவக்காரிக்குப் போதவே போதாது."

"சற்று முன் நான் தங்களை வேண்டிக் கொண்ட காரியத்துக்கு உதவி செய்தால் அவளுடைய தண்டனை பூர்த்தியாகும். சோழ சாம்ராஜ்யத்திற்குத் தனி நாயகியா யிருக்கவேண்டும் என்ற அவள் ஆசை மண்ணோடு மண்ணாகும்."

"தங்கள் விருப்பத்தை நிறைவேற்றுகிறேன். பரிசு என்ன தருவீர்கள்?"

"எது கேட்டாலும் தருவேன். தமிழ்ப் பெண் குலத்தின் மரபுக்கு மாறுபடாத எதைக் கேட்டாலும் தருகிறேன்......"

"ராணி! மேலை நாடுகளில் ஒரு புதிய சமயம் தோன்றி யிருக்கிறதாம். அரபு தேசம், பாக்தாத் தேசம், பாரஸீகம் முதலிய தேசங்களில் அது பரவியிருக்கிறதாம். அந்தச் சமயக் கோட்பாட்டின் படி கல்யாணமான தம்பதிகள் விரும்பினால் பிரிந்து விடலாமாம். அதற்கு ஒரு சடங்கு உண்டாம். ஸ்திரீகள் கூட வேறு கலியாணம் செய்துகொள்ளலாம்."

"ஆம்; நானும் அவ்வாறு கேள்விப் பட்டிருக்கிறேன்."

"நாம் அந்த நாடுகளுக்குப் போய்விடுவோம். அந்தச் சமயக் கோட்பாட்டைச் சேர்ந்து விடுவோம்......"

"அப்படி யெல்லாம் சில சமயம் நானும் பகற் கனவு காண்பதுண்டு. ஆனால் நடக்கக்கூடிய காரியமா?"

"தேவி! ஏன் நடக்காது? அவசியம் நடக்கும். தாங்கள் மட்டும் சம்மதித்தால் நடக்கும். தங்களுடன் கப்பல் ஏறிக் கடல் கடந்து செல்வேன். தூர தேசங்களில் இறங்குவேன். இந்தக் கையில் பிடித்த கத்தியின் வலிமையினால் பெரியதொரு ராஜ்யத்தை ஸ்தாபிப்பேன். நவரத்தினகசிதமான சிங்காதனத்தில் தங்களை ஏற்றி வைப்பேன்! தங்களுடைய சிரஸில் பார்த்தோர் கண் கூசும்படியான மணி மகுடத்தைச் சூட்டுவேன். இதற்காகவே நான் பிறந்திருக்கிறேன்; இதற்காகவே இவ்வளவு போர்க்களங்களிலும் சாகாமல் உயிரோடு இருந்து வருகிறேன்......"

"ஐயா! அதோ என் கணவர் திரும்பி வந்து கொண்டிருக்கிறார். படகு கரையை நெருங்கி விட்டது. அமைதி அடையுங்கள். மற்ற விஷயங்களைப் பிறகு பேசிக் கொள்ளலாம்......"

"பிறகு எப்போது தேவி?"

"எங்களுடன் தஞ்சாவூருக்கு வாருங்கள்! விருந்தாளியாக வர அழைப்புக் கிடைக்கா விட்டால் சிறையாளியாக வாவது வாருங்கள்!"

"தங்களுடைய அழைப்பே எனக்குப் போதும்" என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் ஏறி வந்த படகு கரையை அடைந்தது. கிழவர் படகிலிருந்து இறங்கி ஆங்காரமே உருவெடுத்தவர் போல் வந்தார்.

நந்தினியும் பார்த்திபேந்திரனும் எழுந்து நின்றார்கள். அவர்களைப் பழுவேட்டரையர் பார்த்த பார்வையில் அனல் பொறி கிளம்பிற்று. பாவம்! அத்தனை நேரம் அவர்கள் சேர்ந்து உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்ததை நினைத்தாலே கிழவருக்குக் கோபமாயிருந்தது. அதை வெளியிடுவதற்கும் வழியில்லை. ஆகையால் உள்ளத்தில் கோபம் மேலும் கொதித்துப் பொங்கியது.

"நாதா! கப்பலை நன்கு சோதித்தீர்களா? மாலுமிகளை நன்றாய் விசாரித்

தீர்களா? இவர் கூறியதெல்லாம் உண்மைதானா?" என்று நந்தினி கொஞ்சும் குதலை மொழியில் கேட்டாள்.

அந்தக் குரல் பழுவூர் அரசரைக் கொஞ்சம் சாந்தப் படுத்தியது.

"ஆம், ராணி! இவன் கூறியதெல்லாம் உண்மையென்று தெரிந்தது. சோழ நாட்டின் தவப் புதல்வன், சோழ குலத்தின் செல்வக் குமாரன்,—தமிழகத்தின் கண்ணின் மணியான இளவரசன்,—போய் விட்டான்!" என்று கூறிப் பல்லவனைத் திரும்பிப் பார்த்து, "அதற்குக் காரணமானவன் இதோ நிற்கும் கொலை பாதகச் சண்டாளன்தான்!" என்று கர்ஜித்தார்.

"ஐயா! அதற்குக் காரணம் நான் அல்ல; என் பேரில் பழி போடாதீர்கள்! இளவரசரைக் கடல் கொண்டதற்குக் காரணம் சோழ நாட்டையே ஆட்டுவிக்கும் பெண் உருக் கொண்ட மோகினிப் பிசாசு!" என்றான் பார்த்திபேந்திரன்.

கிழவரின் கோபம் இப்போது அணை கடந்த வெள்ளமாயிற்று. நந்தினியைப் பற்றித்தான் அவன் அவ்வாறு சொன்னதாக எண்ணினார்.

"அட பாவி! என்ன சொன்னாய்?" என்று கூறிக் கொண்டு, தரையில் கிடந்த ஈட்டியைச் சட்டென்று குனிந்து எடுத்தார். பார்த்திபேந்திரனைக் குறி வைத்து ஓங்கினார்.

நந்தினி அவருடைய கையைப் பிடித்துத் தடுத்தாள். "நாதா! இது என்ன காரியம்! எத்தனையோ பகைவர்களைக் கொன்ற தங்கள் வெற்றி வேல் இந்த விருந்தாளியின் இரத்தத்திலா

லவோ நான் எவ்வளவு தடுத்தும் கேளாமல் இளவரசர் அலை கடலில் குதித்தார்? ஆகையால் இளவரசரின் மரணத்துக்குக் குந்தவை காரணம் என்று சொன்னேன்" என்றான் பார்த்திபேந்திரன்.

பழுவேட்டரையர் தம் அவசர புத்தியைக் குறித்துச் சிறிது வெட்கம் அடைந்தார். அதை வெளியில் காட்டிக் கொள்ளாமல் "வெறுமனே மூடி மறைக்கப் பார்க்காதே! இளவரசரின் அகால மரணத்துக்கு நீயும் பொறுப்பாளிதான். அத்தகைய சுழற் காற்று அடித்த சமயத்தில் அவர் கப்பலிலிருந்து படகில் இறங்குவதற்கு நீ எப்படிச் சம்மதித்தாய்!—தொலைந்து போ! என் கண் முன்னால் நில்லாதே!" என்றார்.

நந்தினி குறுக்கிட்டு, "நாதா! இவரையும் தஞ்சாவூர் அழைத்துப் போவது நல்லதல்லவா? நடந்தது நடந்தபடி இவரே சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பது நலம் அல்லவா? இல்லாவிட்டால், ஏற்கெனவே நம்பேரில் குற்றம் சொல்லக் காத்திருப்பவர்கள் இதையும் சேர்த்துச் சொல்வார்களே? நாம்தான் இளவரசரைக் கடலில் மூழ்கடித்து விட்டோம் என்று கூடக் கூசாமல் பழி சொல்வார்களே?" என்றாள்.

"சொன்னால் சொல்லட்டும்! அதற்கெல்லாம் நான் அஞ்சியவன் அல்ல. சொல்லுகிறவன் நாக்கைத் துண்டிக்கச் செய்வேன். ஆனால் இவன் நம்மோடு வருவதும் ஒரு காரியத்துக்கு நல்லதுதான்.—பார்த்திபேந்திரா! ஏன் அங்குமிங்கும் பார்த்து விழிக்கிறாய்? தப்பி

இவரே சக்கரவர்த்தியிடம் தெரிவிப்பது

## புத்தி வந்ததா?




ஆந்திர 'காங்கிரஸ்' வாதிகள் மூன்று பகுதிகளாகப் பிரிந்து தேர்தலில் ஈடுபட்டார்கள். மூன்று பகுதிகளும் படுதோல்வி அடைந்தன.

பழுவேட்டரையர் முகத்தில் சிறிது மலர்ச்சி காணப்பட்டது. "நீ வீர பல்லவ குலத்தில் பிறந்த வீரன்; சந்தேகமில்லை. எங்களுடன் தஞ்சாவூருக்கு வந்துவிட்டுப் போகச் சம்மதம் என்றால் சொல். உன்னைக் கட்ட வேண்டிய அவசியமில்லை" என்றார்.

"அதுதான் என் விருப்பம்; சக்கரவர்த்தியை நேரில் பார்த்து நடந்தது நடந்தபடி சொல்ல விரும்புகிறேன். என் பேரிலும் வீண் பழி ஏற்படக்கூடாதல்லவா?" என்றான் பார்த்திபேந்திரன்.

"அப்படியானால், உடனே புறப்படுவோம்" என்றார் பழுவேட்டரையர்.

**அ**ச்சமயம் அவர்கள் இருந்த இடத்துக்குச் சற்றுத் தூரத்திலிருந்த காட்டிலிருந்து ஆந்தை ஒன்று கூவும் சத்தம் கேட்டது.

நந்தினி சத்தம் வந்த திக்கை நோக்கினாள். அதனால் அவள் முகத்தில் ஏற்பட்ட மாறுதலை மற்ற இருவரும் கவனிக்கவில்லை.

"இந்தக் கோடிக்கரைக் காடு மிக விசித்திரமானது. இங்கே பட்டப் பகலிலேயே கோட்டான் கூவுகிறதே!" என்றான் பார்த்திபேந்திரன்.

இன்னும் இரண்டு தடவை அதே மாதிரி ஆந்தையின் குரல் கேட்டது.

நந்தினி திரும்பிப் பார்த்து, "உடனே புறப்பட வேண்டியதுதானா? இன்னும் ஒரு நாள் இங்கே இருந்து பார்ப்பது நல்லதல்லவா? இளவரசர் ஏதாவது கட்டையைப் பிடித்துக் கொண்டு கரையில் வந்து ஒதுங்கக் கூடும் அல்லவா?" என்றாள்.

"பார்த்திபேந்திரா! இளைய ராணியின் மதி நுட்பத்தைப் பார்த்தாயா? நமக்கு இது தோன்றாமல் போயிற்றே? ஆம்; இன்னும் ஒருநாள் இங்கே இருக்க வேண்டியதுதான். இருப்பது மட்டும் போதாது. கடற்கரை நெடுகிலும் ஆட்களை நிறுத்தி வைக்க வேண்டும்; தேடிப் பார்க்கவும் சொல்ல வேண்டும்!" என்றார் பழுவேட்டரையர்.

"எனக்கு ஆட்சேபமில்லை, ஐயா! ஆனால் இளவரசர் இனி அகப்படுவார் என்ற நம்பிக்கை எனக்கில்லை. சுழற்காற்று அடித்தபோது கடலின் கொந்தளிப்பைப் பார்த்திருந்தால் தாங்களும் என்னைப் போலவே நிராசை கொள்வீர்கள்" என்றான் பார்த்திபேந்திரன்.

எனினும், கிழவர் கேட்கவில்லை. கடற்கரை நெடுகிலும் ஒரு காத தூரத்துக்குத் தம் ஆட்களைப் பரவலாக நிறுத்தி வைத்தார். அவரும் அமைதியின்றிக் கடற்கரையோரமாக அலைந்து திரிந்தார்.




நகர உரிமையாளர்கள்:

டைரக்ஷன்: S.பாலசந்தர். ஸ்டூடியோ: சென்ட்ரல். பெல் பிக்சர்ஸ்....

சென்னை: கெயிட்டி, தங்கம், மற்றும் முக்கிய நகரங்களில் நடைபெறுகிறது

# ஸ்டாண்டர்ட்

# வான்கார்ட்



## குடும்பத்திற்கேற்ற எங்கும் பிரசித்திபெற்ற கார்

கீழ்க்குறித்த குணம்சங்களை கவனியுங்கள் :

★ சுருள் ஸ்பிரிங்குகளும் மெத்தையும் கூடிய சௌகரியம்

★ ஆறு பேர் தாராளமாக உட்காரலாம்

★ 17·8 H. P. எஞ்சின்

★ 8" க்ளியரான்ஸ் - நாட்டுப்புற ரஸ்தாக்களுக்கு இணையற்றது

★ மிக சிக்கனமான பெட்ரோல் செலவு

★ மோட்டார் சவாரியில் மிக நவீன வசதியனைத்தும் உடையது

○●○

## யூனியன் கம்பெனி (மோட்டார்ஸ்) லிமிடெட்

மதராஸ் - பெங்களூர் - உதகமண்டலம்




## 18

ஆசை யொழிந்தநாளதுவே செல்வம்
படுப்பது தரையில் உடுப்பது மான்தோல்
கோயில்நின்னை என்கவலையற்ற இல்லம்
அங்கொரு மரத்தடியே கவலை தீர்க்கும் விடுதி
எங்குமில்லை எதிருமில்லை வேண்டாமையின்
ராகவிகார மொழிந்த சித்தம் [இன்பம்
போக சுகவின்பங்களில்லை அந்தஇன்பம்

* * *

ஸுரமந்திர தருமூல நிவாஸ:
சய்யா பூதலமஜினம் வாஸ:
ஸர்வபரிக்ரஹ போகத்யாக:
கஸ்ய ஸுகம் ந கரோதி விராக:

என்கிறார் சங்கரர்.

* * *

"வேண்டாமை அன்ன விழுச்செல்வம் ஈண்டில்லை
ஆண்டும் அஃதொப்ப தில்"

என்றார் திருவள்ளுவர்.

சுகம் என்பது உள்ளத்தில் இடம் பெறும் ஒரு நிலை. அது வெளிப் பொருளில் அல்லது சரீரத்தில் இடங்கொண்ட ஒரு பொருளல்ல. அனுபவத்தைச் சொல்லுகிறார் சங்கரர், படுப்பது தரையில் என்று ஆரம்பித்து ராகவிகார மொழிந்த சித்தத்தின் இன்பம் போக சுகவின்பங்களில் கிடைக்காது என்று. இது உலக விஷயங்களில் சிக்கி அலைந்து துறப்பதை அஞ்சித் துன்பமடையும் மக்களுக்கு உறுதி கூறும் மொழி. எப்படி விடுவது, பிறகு என்ன சுகம், என்று ஐயப்படவேண்டாம். போகங்களில் மனசைச் செலுத்தி ஆசைப்பட்டு மெய் வருத்தம் பட்டுத் துன்பம் அடைந்து அலைய வேண்டாம். துறப்பதிலுள்ள பூரண சுகம் வேறு வழிகளில் அடைய மாட்டாய் என்கிறார்.

## 19

யோகத்திலிருப்பினும் ஒரு சுக
போகத்திலிருப்பினும்
கூட்டத்திலிருப்பினும் தனி யிருப்பினும்
அகிலம் கடந்த மெய்ப்பொருளில்
[கலந்து மகிழும்
மகிழ்ச்சியே குறைவிலா மகிழ்ச்சி.

* * *

யோகரதோவா போகரதோவா
ஸங்கரதோவா ஸங்கவிஹீன:
யஸ்ய ப்ரம்மணி ரமதே சித்தம்
நந்ததி நந்ததி நந்தத்யேவ.

இன்பம் என்பது உள்ளத்தின் நிலை. புலனனுபவத்தில் உண்டாகும் மகிழ்ச்சி ஒருவகை இன்பம். ஆனால் இறைவனோடு கலந்து நின்று உள்ளத்தில் உண்டாகும் ஆனந்தம் வேறு. அதுவே குறைவிலா இன்பம்.

இதையே மாணிக்கவாசகர் பாடினார்:

நினைத்தொறு உள்ளதோர்
பூவினில்தேன் உண்ணாதே
நினைத்தொறும் காண்தொறும்
பேசுந்தொறும் எப்போதும்
அனைத்தெலும்பு உள்நெக
ஆனந்தத் தேன் சொரியும்
குனிப்புடையானுக்கே
சென்று ஊதாய் கோத்தும்பீ

---

सुरमन्दिरतरुमूलनिवासः
शय्या भूतलमजिनम् वासः ।
सर्वपरिग्रहभोगत्यागः
कस्य सुखं न करोति विरागः ॥

योगरतो वा भोगरतो वा
संगरतो वा संगविहीनः ।
यस्य ब्रह्मणि रमते चित्तम्
नन्दति नन्दति नन्दत्येव ॥

குனிப்புடையான்: நடராஜன். கோத்தும்பீ என்று விளித்தது உள்ளத்தை. வேறு தேனைத் தேடிச் சிற்றின்பங்கள் அடைவதில் என்ன பயன்? மனமே, பேரானந்தத் தேன் சொரியும் ஈசன் என்ற பூவிலுள்ள தேனைத்தேடிக் குடிப்பாய் என்று ஆன்மாவை வண்டாக வைத்துச் சொல்லுகிறார்.

நந்ததி, நந்ததி, நந்ததி என்று சங்கரர் மூன்று முறை அடுக்கிச் சொன்னது ஆனந்தத்தின் இடையறாத தன்மையையும் உண்மை உறுதியையும் உணர்த்த. யோகமும் துறவும் கொள்ளாமல் உலக வாழ்க்கையிலிருந்த போதிலும் எந்தக் காரியத்தில் ஈடுபட்டிருந்த போதிலும் சித்தம் மெய்ப்பொருளோடு ஒட்டி நிற்பது முடியும். அப்படி நிலைத்த உள்ளத்தில் ஆனந்தம் குடிகொள்ளும். "ஆராத இன்பம் அருளும் மலை" என்று ஈசனைச் சொல்வது இதனாலேயே.


# ரஸிக ரஞ்சன சபா (ரிஜிஸ்டர்டு)

**3, பார்க் ஸைட் ரோடு, கல்கத்தா**

## ஸ்ரீ தியாகராஜ யதீந்த்ர மஹோத்ஸவம் 1952

நெ. 2, எஸ். ஆர். தாஸ் ரோடில் அமைக்கப்பட்டிருக்கும் விஸ்தாரமான பந்தலில்

*(ஸதர்ன் அவின்யூ ரோடும், எஸ். ஆர். தாஸ் ரோடும் சந்திக்கும் இடம்)*

**31-1-1952 முதல் 10-2-1952 வரை**

★

**நிகழ்ச்சி விவரம்:**

| | | |
|---|---|---|
| 31-1-52 | 'ஸ்ரீ தியாகராஜா' | — தமிழ் நாடகம் |
| 1-2-52 | பாலக்காடு ஸ்ரீ சுப்ரமணிய தீக்ஷிதர் | — ஹார்மோனியம் பக்க வாத்தியங்களுடன் |
| 2-2-52 | ஸ்ரீ டி. கே. ராதாகிருஷ்ணன் | — புல்லாங்குழல் |
| | ஸ்ரீ வி. ஆர். மணி | — வயலின் |
| | ஸ்ரீ என். எஸ். மணி (திருவனந்தபுரம் வானொலி நிலையம்) | — மிருதங்கம் |
| 3-2-52 | 3-30 P. M. ஸ்ரீமதி ராஜலக்ஷ்மி & பார்ட்டி | — பாட்டு |
| | 7 P. M. ஸ்ரீமதி டி. வி. ரெத்னம் & பார்ட்டி | — பாட்டு |
| 4-2-52 | கலைவாணி ஸ்ரீமதி பி. எஸ். சரஸ்வதி தேவி B. A. | பாட்டு |

[redacted]



# அரளி மரத்தடியிலே..

மூலக்கதை: கன்னடம்

ஆசிரியர்: பி.ஸி.ராமச்சந்திர சர்மா

மொழிபெயர்ப்பு: வாஞ்சி

அந்தப் பாழ் வீட்டின் திண்ணையில் நாங்கள் படுத்துக் கொண்டு இரண்டு மணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டது. எங்களில் யாருமே தூங்கவில்லை. எங்களுக்குத் தூக்கம் எப்படி வரும்!

எனக்குப் பக்கத்தில் எங்கள் ஊர் கிராம முனிசிப்பின் மகன் படுத்துக் கொண்டிருந்தார். அவர் நேராக ஆகாயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த சந்திரனை உற்று நோக்கிய வண்ணம் இருந்தார்.

ஆறு அடி உயரம் உள்ள ஆஜானுபாகுவும் திடகாத்திரருமான அவர் அவ்விதம் படுத்துக் கொண்டிருந்தது என் மனசை என்னவோ செய்தது. அவர் தலை, சிப்பைக் கண்டு ஒரு வாரத்துக்கு மேல் ஆகி யிருந்தது. அவர் க்ஷவரம் செய்து கொண்டும் நாளாகி யிருந்தது. அவருடைய சட்டையிலோ பொத்தான்களே இல்லை!

அவர் இவ்வளவு அலங்கோலத்துடனிருந்தாலும், அவர் என் அருகில் படுத்துக் கொண்டிருந்தது எனக்கு ஆறுதலைக் கொடுத்தது. தாயின் அருகில் படுத்துத் தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தை திடீரென்று விழித்துக் கொள்ளும்; தான் இருளில் படுத்துக் கொண்டிருப்பதைக் குறித்து அதற்குச் சிறிதும் பயம் உண்டாகாது. ஏனெனில் அதன் தாய் பக்கத்தில் படுத்திருக்கிறாள் அல்லவா! அது போலவே வீர புருஷரான கிராம முனிசிப்பின் மகன் என் அருகில் படுத்துக் கொண்டிருந்தது என் பயத்தை அறவே அகற்றியது.

நாங்கள் மௌனமாகப் படுத்துக் கொண்டிருந்தோம். எங்களில் ஒருவருக்கும் அப்போது எதுவும் பேச மனம் வரவில்லை.

அந்தகாரம் சூழ்ந்திருந்த எங்கள் மன நிலைக்கும் வெண்ணிலாவுக்கும் பொருத்தம் இராததுபோல் தோன்றியது. அப்போது மை இருட்டாக இருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும். பட்டப்பகல் போல் நிலவு காய்ந்து கொண்டிருந்தது, எங்கள் மனத் துயரத்தை ஏளனம் செய்து தூண்டுவது போல் தோன்றியது!

அவ்வமயம் சிறிது தூரத்தில் ஒரு நாய் திடீரென்று குரைத்தது, என்னைத் தூக்கிவாரிப் போட்டது. அது குரைக்கவில்லை; வீறிட்டு அழுதது என்றே சொல்ல வேண்டும். அது அந்த அகாலத்திலே தன் வாழ்க்கைத் துயரத்தை உலகத்துக்கு எடுத்துக் கூறுவதுபோல் தோன்றியது.

அவ்வளவுதான்! அந்த அழுகைக் குரலைக் கேட்டதும், எனக்கும் அழுகை பீறிட்டுக் கொண்டு வந்தது. அது வரையில் என் மன வேதனையைப் பொறுத்துக் கொண்டிருந்த எனக்கு அதற்கு மேல் சகிக்க முடியவில்லை. விம்மி விம்மி அழத் தொடங்கினேன்.

என் பக்கத்தில் படுத்துக் கொண்டிருந்த பிள்ளை என்னைச் சமாதானப் படுத்த முயன்றார். ஆனால், கிராம முனிசிப்பின் மகன் நான் அழுவதைத்தடுக்க

எனக்குப் பக்கத்தில் எங்கள் ஊர் கிராம முனிசிப்பின் மகன் படுத்துக் கொண்டிருந்தார். அவர் நேராக ஆகாயத்தில் பிரகாசித்துக் கொண்டிருந்த சந்திரனை உற்று நோக்கிய வண்ணம் இருந்தார்.

ஆறு அடி உயரம் உள்ள ஆஜானுபாகுவும் திடகாத்திரருமான அவர் அவ்விதம் படுத்துக் கொண்டிருந்தது என் மனசை என்னவோ செய்தது. அவர் தலை, சிப்பைக் கண்டு ஒரு வாரத்துக்கு மேல் ஆகி யிருந்தது. அவர் க்ஷவரம் செய்து கொண்டும் நாளாகி யிருந்தது. அவருடைய சட்டையிலோ பொத்தான்களே இல்லை!

நிலைக்கும் வெண்ணிலாவுக்கும் பொருத்தம் இராததுபோல் தோன்றியது. அப்போது மை இருட்டாக இருந்தால் பொருத்தமாக இருந்திருக்கும். பட்டப்பகல் போல் நிலவு காய்ந்து கொண்டிருந்தது, எங்கள் மனத் துயரத்தை ஏளனம் செய்து தூண்டுவது போல் தோன்றியது!

அவ்வமயம் சிறிது தூரத்தில் ஒரு நாய் திடீரென்று குரைத்தது, என்னைத் தூக்கிவாரிப் போட்டது. அது குரைக்கவில்லை; வீறிட்டு அழுதது என்றே சொல்ல வேண்டும். அது அந்த அகாலத்திலே தன் வாழ்க்கைத் துயரத்தை உலகத்துக்கு எடுத்துக் கூறுவதுபோல் தோன்றியது.

கிறாயே! பட்டணம் இன்னும் வெகுதூரமிருக்கிறது. இப்போதே புறப்பட்டால்தான் மத்தியானமாவது அங்கு போய்ச் சேர்ந்து நமது வேலையை முடிக்கலாம்'' என்றார் அவர்.

நான் விழித்துக் கொண்டபோது பிள்ளை பரட்டையாக இருந்த தமது தலை மயிரைப் படிய வைத்துக் கொண்டிருந்தார்.

நாங்கள் அவ்விதம் அந்தப் பட்டணத்துக்குப் போகும்படி நேர்ந்ததற்குக் காரணம் என்ன என்பதைச் சொல்ல வேண்டும் அல்லவா!

* * *

முன்பு எங்கள் கிராமத்தில் இரண்டு சமூகத்தினரும் அன்னியோன்னியமாகவே வாழ்ந்து வந்தனர். ஆனால் இப்போதோ அங்கு எங்களுடைய சமூகத்தினர் மாத்திரமே வசித்து வருகிறார்கள். தேசத்தின் பலவிடங்களிலும் எழுந்த மத வெறி எங்கள் கிராமத்தையும் ஆட்கொண்டு அல்லோலகல்லோலம் செய்து விட்டது.

டில்லியில் நமது தலைவர்கள் என்ன பேசிக் கொண்டிருந்தார்கள் என்பது எங்களுக்குத் தெரியாது. பொறுப்புள்ள தலைவர்கள் இருக்கும்போது நாங்கள் ஏன் அதை யெல்லாம் பற்றிக் கவலைப்பட வேண்டும்!

எங்கள் கிராமத்தில் இரண்டு சமூகங்களைச் சேர்ந்தவர்களும் அடிக்கடி சந்தித்து, அளவளாவிப் பேசிக் கொண்டுதான் இருந்தோம்.

ஆனால் திடீரென்று ஒரு நாள், நாங்கள் எங்கள் கண்களையே நம்ப முடியாத விபரீதச் சம்பவம் ஒன்று எங்கள் கிராமத்தில் நிகழ்ந்தது.

மற்ற சமூகத்தைச் சேர்ந்த யாவரும் எங்கள் கிராமத்திலிருந்து மாயமாக மறைவது போல் எங்கேயோ போய் விட்டார்கள்! அவர்கள் வசித்துக் கொண்டிருந்த வீடுகள் எல்லாம் பூட்டப் பட்டுக் கிடந்தன! பக்கத்தில் உள்ள பல கிராமங்களிலும் அவ்விதமே நிகழ்ந்தது என்பதைக் கேட்டபோது எங்களுடைய ஆச்சரியம் எல்லை கடந்தது.

எனினும் சில நாட்கள் சென்ற பிறகு எங்களுடைய பரபரப்பு தணிந்தது; அந்தச் சம்பவத்தை நாங்கள் சிறிது சிறிதாக மறக்கத் தொடங்கினோம்.

ஆனால் திடீரென்று ஒரு நாள் எங்களுக்கு எட்டிய செய்தி எல்லோருக்கும் கலக்கத்தைக் கொடுத்தது. எங்கள் கிராமத்துக்கு மேற்கே இருபது மைல் தூரத்தில் உள்ள மற்றொரு கிராமத்தில் சிலர் பிரவேசித்து எங்கள் சமூகத்தைச் சேர்ந்தவர்களை யெல்லாம் கொன்று விட்டுப் போய் விட்டார்களாம். ஒரே ஒருவர் மாத்திரம் அவர்களின் வெறிக்கு இலக்காகாமல் தப்பி எங்கள் கிராமத்துக்கு வந்து சேர்ந்தார். அவர் கூறிய கோரமான விவரங்களை எங்களால் நம்பவே முடியவில்லை.



''ஜாக்கிரதையாக இருங்கள்! அத்தகைய சம்பவம் உங்கள் கிராமத்தில் ஏற்படாமல் தடுக்க என்ன நடவடிக்கை எடுத்துக் கொள்ளப் போகிறீர்கள்!'' என்று அவர் எங்களைக் கேட்டார்.

நாங்கள் என்ன நடவடிக்கைகளை எடுத்துக் கொள்வது! அவர் கூறிய விவரங்களைத்தான் எங்களால் நம்பவே முடியவில்லையே!

'' அவர்களுடைய 'படையெடுப்பு' ஜாப்தாவில் உங்கள் கிராமத்தின் பெயரும் இருக்கிறதாம்!'' என்று அவர் சொன்னதைக் கேட்டு நாங்கள் என்ன செய்வது என்று தெரியாமல் கலங்கினோம்.

கிராம முனிசீப் எங்கள் கிராமத்தில் உள்ள குடும்பங்களின் தலைவர்களை யெல்லாம் அழைத்து ஒரு கூட்டம் கூட்டினார். ஏதாவது அசம்பாவிதம் நேருவதற்கு முன் சர்க்காரின் பாதுகாப்பை நாட வேண்டும் என்று யோசனை கூறினார்.

சர்க்காரை நாடாமலேயே சொந்தத் தற்காப்பு நடவடிக்கைகளைக் கைக்கொள்ளலாம் என்று சிலர் கூறினர். ஆனால் அதைக் கிராம முனிசீப் ஒத்துக் கொள்ளவில்லை.

கடைசியில் நானும் கிராம முனிசீப்பின் மகனும் பிள்ளையும் தூது கோஷ்டியாகச் செல்ல வேண்டும் என்று முடிவாயிற்று. அருகில் உள்ள நகருக்குச் சென்று, எங்கள் கிராமத்துக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டும் என்று சர்க்கார் அதிகாரியைக் கேட்டுக் கொள்ளும்படி கட்டளை யிட்டனர்.

பிள்ளையிடம் ஜனங்களுக்கு மிகுந்த மதிப்பு உண்டு. அவர் இளைஞராயினும் அரசியல் விஷயங்களை நன்கு அறிந்தவர்; சிறந்த பேச்சாளர். எனவே, அவரது நட்பை நான் நாடினேன். அவர் அடிக்கடி எங்கள் வீட்டுக்கு வருவது உண்டு. யாருடனும் அதிகமாகப் பேச்சு வைத்துக் கொள்ளாத என் தாயார்கூட பிள்ளை என் வீட்டுக்கு வந்தால் அன்புடன் அளவளாவிப் பேசுவாள்.

பிள்ளை என் வீட்டுக்கு அடிக்கடி வருவதற்குக் காரணம் என்னிடம் கொண்டுள்ள நட்புத்தான் என்று நான் நினைத்தேன். ஆனால் கிராமவாசிகள் வேறு காரணம் கூறினார்கள். என் சகோதரி கமலாவின் மீது அவர் கொண்டுள்ள காதலே அதற்குக் காரணம் என்று சொன்னார்கள். அத்தகையோரின் மேற்படி கூற்றையும் வம்புப் பேச்சையும் நான் அவ்வளவாகப் பொருட் படுத்தவில்லை.

* * *

நாங்கள் நகருக்குச் சென்ற போது மத்தியானம் வெகு நேரமாகி விட்டது. எங்கள் அவசரத்தை அறியாத அதிகாரியின் பேட்டி எங்களுக்குக் கிடைத்த போது மாலை ஐந்து மணி இருக்கும்! நாங்கள் வந்த காரணத்தைப் பிள்ளை அதிகாரியிடம் விளக்கி வருகையில் அதிகாரி கொட்டாவி விட்டுக் கொண்டு தமது கைக் கெடியாரத்தில் மணியைப் பார்க்க ஆரம்பித்து விட்டார்!

கடைசியில், "நீங்கள் கூறியவற்றை ஆலோசித்து, அவசியமாயின் உதவி அனுப்பி வைக்கிறோம்" என்று யாதொரு உணர்ச்சியுமின்றி அந்த அதிகாரி பதில் கூறினார்.

சம்பிரதாயமான அந்தப் பதிலைக் கேட்டபோது நாங்கள் திடுக்கிட்டோம். பிள்ளை மாத்திரம் சிறிது கடுமையான தொனியில், "எங்கள் கிராம ஜனங்கள் சர்க்காரையே நம்பிக் கொண்டிருக்கிறார்கள். ஆகையால் அலட்சியமாக இருந்து விடாதீர்கள்" என்று கூறிவிட்டுப் புறப்பட்டார்.

அதிகாரியின் அறையிலிருந்து வெளியே வந்ததும், 'இவர் மாத்திரம் உடனே தகுந்த பாதுகாப்பு முறைகளைக் கைக் கொள்ளாதிருக்கட்டும்; இவரை ஒரு கை பார்த்து விடுகிறேன்" என்று பிள்ளை ஆத்திரத்துடன் சவால் விடுத்தது எனக்கு வியப்பாக இருந்தது.

"இப்போதே நமது ஊருக்குப் புறப்பட்டுச் செல்வோமா!" என்றார் பிள்ளை.

"இப்போது புறப்படுவோமா, காலையில் புறப்படுவோமா!" என்றேன் தயக்கத்துடன்.

"இன்று மத்தியானம் வரையில் நாம் நடந்து வந்திருக்கிறோம். இன்றிரவே நாம் திரும்பிச் சென்றால் நாளை நாம் வயல் வாய்க்கால்களுக்குச் சென்று எதுவுமே செய்ய முடியாது. ஆகையால், இன்றிரவு இங்கேயே படுத்துக் கொள்வோம். விடியற்காலம் புறப்பட்டுச் செல்வோம்" என்று கிராம முனிசீப்பின் மகன் கூறியதை நாங்கள் இருவரும் ஆமோதித்தோம்.

எனவே, அன்றிரவு அங்கேயே ஓரிடத்தில் படுத்து ஓய்வெடுத்துக்கொண்டு, விடியற்காலம் ஊருக்குப் புறப்பட்டோம்.

எங்கள் ஊருக்கு வெகு சமீபத்தில் உள்ள அரளி மரத்தடியில் நாங்கள் கண்ட பயங்கரமான காட்சி கனவுபோல் எங்களுக்குத் தோன்றியது.

அங்கு ஏழு எட்டுப் பெண்கள் அலங்கோலமாகத் தரையில் இரத்த வெள்ளத்தில் கிடந்தனர். அவர்களில் ஓரிருவரைத் தவிர மற்றவர்கள் கோரமாக இறந்து கிடந்தார்கள்.

கிராம முனிசீப்பின் மகன் 'ஐயோ' என்று அலறிய வண்ணம் ஒரு பெண்ணின் மீது விழுந்தார். அவள் அவருடைய மனைவிதான் என்பதை நான் உடனே தெரிந்து கொண்டேன்.

தெருவுக்குள் சென்றபோது நாங்கள்

கொல்லப்பட்டனர் என்பதைத் தெரிந்து கொண்டோம். பல வீடுகள் தீயிடப்பட்டுச் சாம்பராகிக் கிடந்தன. எங்கும் அழுகைக் குரல் ஒலித்தது.

என் சகோதரி உள்படக் கிராமத்தைச் சேர்ந்த சில பெண்களின் கதி என்ன ஆயிற்று என்றே தெரியவில்லை.

அன்றிரவு நான் இந்த உலகத்தையே மறந்து அயர்ந்து தூங்கியது எனக்குப் பெரிய ஆச்சரியமாக இருந்தது. கவலையும் கலக்கமும் எல்லை கடந்து விட்டால் மனத்தில் பயங்கரமான, விசித்திரமான அமைதி ஏற்படும் போலும்!

மறுநாள் காலையில் எழுந்து பார்த்தபோது என் வீட்டில் படுத்திருந்த பிள்ளையைக் காணவில்லை.

சில தினங்களுக்குப் பின் பத்திரிகைகளில் வெளியான செய்தியிலிருந்து பிள்ளையைப் பற்றிய விவரங்களைத் தெரிந்து கொண்டேன். அவர் நாங்கள் ஏற்கெனவே பார்க்கச் சென்ற அதிகாரியைக் கடுமையாகத் தாக்கியதாயும், அதை யொட்டி நடந்த வழக்கில் அவர் ஒரு வருஷம் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டார் என்றும் மேற்படி செய்தி அறிவித்தது.

அந்தச் செய்தியைப் படித்ததும் நான் கண்ணீர் விட்டேன். பிள்ளைமீது எனக்கு இருந்த அன்பும் மதிப்பும் பன்மடங்கு அதிகமாயின.

*   *   *

கிராம முனிசீப்பின் மகன் கூட்டிய பொதுக் கூட்டத்துக்கு எங்கள் கிராமத்திலிருந்தும் பக்கத்துக் கிராமங்களிலிருந்தும் ஆயிரக் கணக்கான ஜனங்கள் வந்திருந்தனர்.

எல்லோரும் 'பழிக்குப் பழி' 'பழிக்குப் பழி' என்று கோஷம் செய்து கொண்டிருந்தார்கள். பழிக்குப் பழி வாங்கினாலன்றி அவர்களுடைய ஆவேசம் தணியாது என்று தோன்றியது.

அப்போது பேசியவர்களில் ஒருவர் மாத்திரம், 'பழிக்குப் பழி வாங்குவது நீதியாகாது' என்று கூறியபோது, ஆயிரக்கணக்கான ஜனங்களும்



வெறி பிடித்தவர்கள்போல் எழுந்தனர். 'கோழை' 'துரோகி' என்றெல்லாம் அந்தப் பிரசங்கியைச் சபித்தனர். எனவே அதற்குமேல் பேச முடியாமல் அவர் உட்கார்ந்து விட்டார்.'

குறிப்பிட்ட சமூகத்தினர் வசிக்கும் குறிப்பிட்ட கிராமத்தின் மீது அன்றிரவே படையெடுப்பதென்று முடிவாயிற்று. ஒவ்வொருவரும் கைக்குக் கிடைத்த ஒவ்வொரு ஆயுதத்தை எடுத்துக் கொண்டனர். தடிகள், கற்கள், கத்திகள், கட்டாரிகள், கோடரிகள் முதலிய பலவித ஆயுதங்களும் ஜனங்களின் கைகளில் தாண்டவமாடின.

அந்தக் கிராமத்துக்கு அருகில் சென்றதும் எல்லாரும் கோஷ்டி கோஷ்டியாகப் பிரிந்தனர். அந்தக் கிராமத்தை நன்கு அறிந்தவர்கள் முகமூடி அணிந்து கொண்டு ஒவ்வொரு கோஷ்டிக்கும் தலைமை வகித்தார்கள்.

நாங்கள் அக் கிராமத்துக்கு அருகில் வந்தோம். அது எங்களுடைய கோபாவேசத்துக்குப் பயந்து எங்கள் காலடியில் கிடப்பதுபோல் தோன்றியது!

பல திசைகளிலிருந்தும் நாங்கள் அந்தக் கிராமத்தின்மீது பாய்ந்தோம். வீடுகள் தீ வைக்கப்பட்டன. கிராமவாசிகள் கொல்லப்பட்டார்கள்.

எங்கள் கிராமத்திலும் பக்கத்துக் கிராமங்களிலும் மேற்படி சமூகத்தினரின் கொடுமையால் உற்றார் உறவினரை இழந்தவர்கள் ஆவேசத்துடன் பிரளயகால ருத்ரனைப்போல் தங்கள் வேலையைச் செய்து முடித்தார்கள்!

எங்களில் சிலர் ஒரு வீட்டுக்குள் பிரவேசித்த போது அங்கு விளக்கு பிரகாசமாக எரிந்து கொண்டிருந்தது. தொட்டிலில் இரண்டு வயதுக் குழந்தை ஒன்று விளையாடிக் கொண்டிருந்தது.

எங்களில் ஒருவர் கத்தியுடன் அருகில் சென்றார். கிராம முனிசிப்பின் மகன் அவரை ஆத்திரத்துடன் இழுத்து அப்பால் தள்ளினார். 'நிரபராதியான இந்தப் பச்சைக் குழந்தைதானா உமக்கு விரோதி!' என்று கடிந்து கொண்டார்.

கிராம முனிசிப்பின் மகன் அந்தக் குழந்தையைக் கையில் எடுத்துச் சில நிமிஷ நேரம் கொஞ்சினார். பிறகு தொட்டிலிலேயே படுக்க வைத்தார்.

அந்தப் பயங்கரமான சூழ்நிலையில் வீரரான கிராம முனிசிப்பின் மகனைத் தவிர வேறு யாரால் அவ்விதம் செய்ய முடியும்!

குழந்தையை விளையாட விட்டு விட்டு நாங்கள் அந்த வீட்டிலிருந்து வெளிக் கிளம்பினோம்.

மேலே குறிப்பிட்ட சம்பவங்கள் நடந்து ஒரு வருஷத்துக்கு மேல் ஆகியது.

பாகிஸ்தானுக்குக் கடத்திச் செல்லப்பட்ட பெண்களை மீட்கும் முயற்சியில் இந்திய சர்க்கார் ஈடுபட்டார்கள் அல்லவா? அதன் பலனாக எங்கள் கிராமத்திலிருந்து கடத்திச் செல்லப்பட்ட சில பெண்கள் திரும்பி வந்தனர். அவர்களை எங்கள் கிராமத்தின் அரளி மரத்தடியிலேதான் நாங்கள் சந்தித்தோம். அவர்களிடையே என் சகோதரியை நான் கண்டபோது எனக்கு உண்டான மகிழ்ச்சியைச் சொல்லி முடியாது.

எங்கள் கிராமத்தில் கோர சம்பவம் ஏற்பட்ட பின் முதல் தடவையாக அன்று தான் எனக்குச் சந்தோஷம் உண்டாயிற்று.

சமூகக் கலகத்தின் கோர நாடகங்களை நேரில் கண்ட என் தாயார் பைத்தியம் பிடித்து இறந்தாள் என்பதை என் சகோதரி கேட்ட போது விம்மி விம்மி அழுதாள்.

அவள் மடியில் வைத்துக் கொண்டிருந்த குழந்தையை நான் பார்த்தேன். உடனே அவள் முகம் வர்ணிக்க முடியாத வேதனையினால் வாடியது.

என் மனதில் இருந்த கேள்விக்குப் பதில் அளிப்பவள் போல், "அண்ணா! இந்தக் குழந்தைக்கு வயதான பிறகு 'என் அப்பா எங்கே!' என்று அது கேட்டால் நான் என்ன சொல்வேன்!" என்றாள் சோகத்துடன்.

அதே சமயம் அவளுடைய பார்வை திடீரென்று எங்கேயோ சென்றது. உடனே வாடியிருந்த அவளுடைய முகம் மலர்ந்தது.

நானும் அப்பக்கம் திரும்பிப் பார்த்த போது சிறிது தூரத்தில் கிராம முனிசிப்பின் மகனும் பிள்ளையும் வந்து கொண்டிருந்தார்கள். பிள்ளை தண்டனை காலம் முடிந்து சிறையிலிருந்து விடுதலையடைந்து வந்து விட்டார் போலும்.

அருகில் வந்ததும் வராததுமாகப் பிள்ளை நான் நிற்பதைக் கூட லக்ஷ்யம் செய்யாமல், 'கமலா!' என்று ஓடி வந்து அவளை ஆலிங்கனம் செய்து கொண்டார். இருவர் கன்னங்களிலும் ஆனந்தக் கண்ணீர் வழிந்து ஓடியது.

எளிதில் உணர்ச்சி வசப்படாத கிராம முன்சிப் மகனின் கண்களில் கூடக் கண்ணீர் ததும்பி நின்றதைக் கவனித்தேன்.

உயர்ந்த குணம் வாய்ந்த பிள்ளை என்னுடைய அத்தியந்த நண்பர் மாத்திரம் அல்ல, என் சகோதரியின் காதலர் என்பதை அறிந்த நானும் இனம் தெரியாத உணர்ச்சி வசப்பட்டேன்!

இதே அரளி மரத்தடியில் அன்று நாங்கள் கண்ட கோரமான காட்சிக்கும் இன்றைய குதூகலமான காட்சிக்கும் எவ்வளவு வேற்றுமை!



இந்த மாதம் முதல் தேதியன்று திருவல்லிக்கேணி நம்மாழ்வார் மண்டபத்தில் கோலார் தங்க வயலைச் சேர்ந்த மாஸ்டர் கோபிநாத்தின் புல்லாங்குழல் கச்சேரி நடைபெற்றது. கச்சேரிக்குத் திருப்பாற்கடல் வீரராகவன் பிடிலும், திருச்சி ராகவன் மிருதங்கமும், ஆர். எஸ். கிருஷ்ணமூர்த்தி ராவ் கடமும் வாசித்துச் சிறப்பித்தார்கள். மேற்படி கச்சேரிக்குத் தலைமை வகித்த ஸ்ரீரங்கம் சடகோபாச்சாரியார் அவர்கள் புல்லாங்குழல் வாசித்த மாஸ்டர் கோபிநாத்தின் திறமையைப் பாராட்டி, எதிர்காலத்தில் நல்ல புகழுடன் விளங்குவதற்கு வேண்டிய ஞானம் இருப்பதாகக் கூறினர்.



# உகந்த ஜோடி



தமிழும் சுவையும் போல, பூவும் மணமும் போல அமைந்த மணமகனும் மணமகளும் இவர்கள். திருமணப் பந்தலில் கண்ணைக் கவரும் மற்றொரு உற்ற ஜோடி வெள்ளி பன்னீர் கூஜாவும்,

கோபுர மார்க்
பன்னீரும்.

**K.T.R**

வாசனைத் திரவிய உற்பத்திசாலை,
விஜயபுரம்..... திருவாரூர், தெ. இந்தியா.



# அருமை ஜிம்மி!

சாமா

ஜிம்மி ரொம்ப சமர்த்து. சங்கர் சொன்னபடி யெல்லாம் கேட்கும். கடையில் சாமான்கள் வாங்கிக் கூடையில் போட்டு அதனிடம் கொடுத்தால் வாயில் கவ்விக் கொண்டு அவனோடு ஓடி வரும்.

ஒரு நாள் சங்கர் கடைத்தெருவிலிருந்து வந்து கொண்டிருந்தான். ஜிம்மியும் வந்து கொண்டிருந்தது. அப்போது சங்கர் திடீரென்று "பர்ஸைக் கடையில் வைத்து விட்டேனே!" என்றான். உடனே ஜிம்மி பறந்து ஓடிப் போய் ஒரு பர்ஸை வாயில் கவ்விய வண்ணம் வந்தது. சங்கர் அதைப் பார்த்ததும், "இது என் பர்ஸ் இல்லையே! வேறு யாருடையதோ!" என்றான். ஜிம்மி மீண்டும் கடைக்கு ஓடியது. கடையிலிருந்து அது திரும்பிய போது, "இந்த நாய்தான் பர்ஸைத் திருடியது! பிடி! பிடி!" என்று கத்திக் கொண்டு சிலர் ஜிம்மியைத் துரத்தினர். ஜிம்மி அவர்கள் கையில் அகப்படாமல் சங்கரிடம் வந்து சேர்ந்தது.

அப்போது சங்கர், "ஜிம்மி! பர்ஸ் என் நிஜார் பாக்கெட்டிலேயே இருந்தது. ஞாபக மறதியாகக் கடையில் வைத்து விட்டேன் என்று சொல்லி உன்னை அநாவசியமாக அலையும் படி செய்து விட்டேன்!" என்றான். ஜிம்மி குதித்துக்கொண்டு சந்தோஷத்தோடு வாலை ஆட்டியது.



# அமரபுரி இளவரசி

விஜயம்

## 5. காட்டில் கமலம்

அதிகாலை வேளையில் அரண்மனையில் முழங்கும் மங்கள வாத்தியங்களின் ஒலியைக் கேட்டுக் கமலம் விழித்துக் கொண்டாள். முதல் நாள் இரவு தான் கண்டது, கேட்டது எல்லாம் கனவோ என்று அவளுக்குச் சந்தேகம் உண்டாயிற்று. சற்றுச் சிந்தித்துப் பார்த்ததும் அவ்வளவும் உண்மை என்று தெரிய வந்தது. உடனே அவளுக்குத் தன் அண்ணன்மார்களைப் பற்றிய நினைவு வந்தது. அந்த நினைவைத் தொடர்ந்து அவர்களுக்கு நேரிட்டிருக்கும் விபத்தும் நினைவுக்கு வந்தது. உடனே கமலம் படுக்கையை விட்டுத் துள்ளி எழுந்தாள். நேரே சித்தி யிருக்கும் இடத்துக்குப் போனாள்.

சித்தியைப் பார்த்ததும் கமலத்துக்கு ஆச்சரியமா யிருந்தது. மற்ற நாட்களில் கமலம் இவ்வளவு நேரங் கழித்து வந்தால் இளைய ராணி உடனே விசுவரூபம் எடுத்து விடுவாள்; நாகப் பாம்பைப்போல் சீறுவாள்; பெண் புலியைப்போல் உறுமுவாள்; தாறு மாறாகப் பேசி ஏசுவாள்.

இன்றைக்கு அந்தத் தடபுடல் ஒன்றையும் காணோம். இளையராணி ஏதோ சிந்தித்தபடி இருந்தாள்.

கமலத்துக்கு அன்றைக்கு வேலையே ஓடவில்லை. ஏதோ ஒரு மாதிரி வேலைகளையெல்லாம் செய்துவிட்டு, மெதுவாக இளவரசர்களின் அரண்மனைக்குப் போய்ப் பார்த்தாள். அரண்மனை நிசப்தமா யிருந்தது. இளையராணியின் அதிகாரத்துக்கு அது உட்பட்டு விட்டது என்பதற்கு அடையாளமாக, அந்த அரண்மனை வாசலில் இளைய ராணியின் அந்தரங்க ஏவலாளர்களான ஆயுதம் தாங்கிய வீரர்கள் காவல் புரிந்தனர்.

கமலத்துக்கு அவர்களைப் பார்ப்பதற்கே பயமா யிருந்தது. இளவரசர்களின் கதி என்னவாயிற்று? மந்திரவாதி அவர்களை என்ன உருவமாக மாற்றினான்? அவர்கள் இப்போது எங்கே? — இப்படி யெல்லாம் கமலத்தின் மனத்தில் எத்தனையோ கேள்விகள் எழுந்தன. பாவம்! அவளுக்குப் பதில்தான் கிடைக்கவில்லை. என்ன செய்வது என்றும் அவளுக்குத் தோன்றவில்லை.

இரண்டு நாட்கள் சென்றன. இளவரசர்களின் மாளிகை பூட்டப்பட்டே கிடந்தது. கமலம் அரண்மனைக் காவலர்களை யெல்லாம் இளவரசர்களைப் பற்றிக் கேட்டுப் பார்த்தாள். அவர்கள் இது பற்றித் தங்களுக்கு ஒன்றுமே தெரியாது என்று சாதித்து விட்டனர்.

ஒரு வாரம் பொறுத்துப் பார்த்தாள், கமலம். அண்ணன்மார்களைப் பற்றிய நினைவுடன் கூட இறந்துபோன அவள் தாயாரைப் பற்றிய நினைவும் சேர்ந்து கொண்டது. "ஐயோ, அம்மா மட்டும் இருந்தால் இப்படி யெல்லாம் நடக்குமா? அப்பாவும் இப்படி என்மீது அன்பில்லாமல் இருப்பாரா?" என்று நினைத்து அழுதாள் கமலம்.

கமலம் அரண்மனையில் உட்கார்ந்து கண்ணீர் விடுவதை இளைய ராணி பார்த்துக் கொண்டே வந்து விட்டாள்.

"என்ன கமலம், ஏன் அழுகிறாய்? உனக்கு என்ன வந்து விட்டது அழும்படியாக?" என்று கோபத்தோடு கேட்டாள்.

கமலத்துக்குத் துக்கம் தாங்கவில்லை. அதன் காரணமாக என்றைக்கும் இல்லாத துணிச்சல் அவளுக்கு எங்கிருந்தோ வந்து சேர்ந்தது.

"சித்தி, என் அருமை அண்ணன்மார்கள் எங்கே போனார்கள்? அவர்களைப் பார்த்து ஒரு வாரத்துக்கு மேல் ஆகிறதே! சித்தி, சித்தி! அவர்கள் எங்கே? உனக்குத் தெரியுமா?" என்று கேட்டுக் கமலம் விம்மி விம்மி அழுதாள்.

அடுத்த நிமிஷம் இளையராணி பத்திரகாளியாக மாறினாள்.

"இது என்ன அக்கிரமம்! உன் அண்ணன்மார்களை நானா பிடித்து வைத்துக் கொண்டிருக்கிறேன்? அவர்கள் எங்கே போனார்கள் என்று எனக்கு எப்படித் தெரியும்? என்னிடம் இப்படி யெல்லாம் பேசக் கூடாது. ஜாக்கிரதையாக நடந்து கொள்!" என்று நாடக மேடையில் பேசுவது போல உரத்த குரலில் பேசினாள் இளையராணி.

"இல்லை, சித்தி! என் அண்ணன்மார்கள் தினந்தோறும் உன்னிடம் சொல்லிக்கொண்டு தானே வேட்டையாடப் போவார்கள்? ஆகையினால் உனக்கு அவர்களைப் பற்றித் தெரிந்திருக்கும் என்று நினைத்தேன். ஒரு வாரமாக அவர்களைக் காணோம் என்றால் என் மனசுக்கு மிகவும் வேதனையா யிருக்கிறது!" என்றாள் கமலம்.

உடனே இளையராணி கலீர் என்று சிரித்தாள்.

பிறகு, பரிகாசக் குரலில், "அமரபுரி இளவரசி, தங்களுடைய அண்ணன்மார்கள் இருக்

கும் இடம் யாருக்கும் தெரியாது. இளவரசிக்கு விருப்பம் இருக்குமானால் அவர்களைத் தாராளமாக எங்கு வேண்டுமானாலும் தேடிக் கொள்ளலாம்!" என்று கூறி விட்டு இளைய ராணி மீண்டும் சிரித்தாள்.

கமலத்துக்கு அவள் சிரிப்பைக் கண்டதும் எரிச்சல் பற்றிக் கொண்டு வந்தது. அப்பாவிடம் தன் அண்ணன்மார்கள் காணாமற் போனதைப் பற்றிச் சொல்லுவோம் என்று நினைத்து அரண்மனைப் பக்கம் போக அடியெடுத்து வைத்தாள்.



உடனே இளைய ராணி அதை அறிந்து கொண்டு, "கமலம், உன் அப்பாவிடம் இதைப்பற்றி நீ சொல்ல வேண்டும் என்கிற அவசியமே இல்லை. அந்தப் பொறுப்பில்லாத போக்கிரி அரச குமாரர்களைப் பற்றி நானே அவரிடம் சொல்லி விட்டேன். 'எங்கே போய்விடப் போகிறார்கள், கழுதைகள்! தானே வந்து சேருகிறார்கள்!' என்று சொல்லி விட்டார். நீ அந்தப் புரத்துக் காரியங்களைக் கவனி!" என்று உத்தரவு போட்டு விட்டுப் போய் விட்டாள்.

இதைக் கேட்டதும் கமலத்துக்கு ஓவென்று கதறி அழலாமா என்றிருந்தது. இளைய ராணிக்கு அப்பாவிடம் இருந்த செல்வாக்கைப் பற்றிக் கமலத்துக்கு ஏற்கெனவே தெரியுமாதலால் இது விஷயமாக அவரிடம் போக வேண்டாம் என்று தீர்மானித்துக் கொண்டாள்.

கமலத்தின் மனம் அன்று பட்ட வேதனை கொஞ்சமல்ல. "சாம்ராஜ்யத்தை ஆளப் பிறந்த அரசகுமாரர்கள் இளைய ராணியின் சூழ்ச்சியினால் எங்கேயிருந்து அவதிப்படுகிறார்களோ? அந்தக் கொடியவள் அவர்கள் உருவத்தையே அல்லவா மாற்றி விட்டாள்! தெய்வமே! அவர்களை எங்கே போய்த் தேடுவது? எப்படிக் கண்டு பிடிப்பது? இது நம்மால் முடியுமா?" என்று நினைத்துக் கண்ணீர் பெருக்கினாள் கமலம்.

இப்படி மூன்று நாட்கள் சென்றன. வர வர இளைய ராணியின் அதிகாரமும் துன்புறுத்தலும் அதிகமாயின. கமலத்துக்கு வேலையும் அதிகமாயிற்று. இத்தனை நாட்களாகக் கமலம் சித்தியின் கொடுமைகளைச் சகித்து வந்ததற்குக் காரணம், எப்படியாவது அண்ணன்மார்களுக்கு இதைத் தெரியும்படியாகச் செய்து விட்டால் தன் கஷ்டங்களெல்லாம் நீங்கி விடுவதுடன், இளைய ராணியின் கொட்டமும் அடங்கும் என்பது தான். அந்த அண்ணன்மார்களுக்குத்தான் ஆபத்து வந்து விட்டதே? இப்போது அவர்களையே கமலம் அல்லவா காப்பாற்ற வேண்டும்போலிருக்கிறது?

கடைசியில் கமலம் ஒரு முடிவுக்கு வந்தாள். 'இங்கேயே இருந்து கண்ணீர் விடுவதில் என்ன பிரயோஜனம் ஏற்படப் போகிறது? நாமும் காட்டுக்குப் போய் அண்ணன்மார்களைத் தேடிக் கண்டு பிடிக்க முயலுவோம். முயற்சியில் வெற்றி அடைந்தால் அவர்களோடு சேர்ந்து கொள்ளுவோம். அப்படி அவர்களைக் கண்டு பிடிக்க முடியாவிட்டால் துஷ்ட மிருகங்களுக்கு இரையாகி இறந்து விடுவோம்' என்று தீர்மானித்தாள். சித்தியைவிடக் காட்டு விலங்குகள் கொடுமை செய்து விடுமா என்று கேட்டுக் கமலம் தன்னைத்தானே தைரியப் படுத்திக் கொண்டாள்.

அன்று அதிகாலையில் எழுந்ததும் கமலத்துக்கு அவளை அறியாமல் உற்சாகமும் பலமும் ஏற்பட்டிருந்தன. முதல் நாள் இரவு அவள் செய்த தீர்மானத்தை நிறைவேற்றும் மன உறுதியும் அவளுக்கு உண்டாயிற்று. ஆகவே, அவள் படுக்கையை விட்டு எழுந்ததும் இளையராணியின் அந்தப்புரத்துக்குப் போகாமல் நேரே அரண்மனை வாயிலுக்குப் போனாள். அரண்மனை வாயிலைத் தாண்டி நகரத்துக்குள் பிரவேசித்தாள். பிறகு நகரத்தைக் கடந்து வெகு தூரம் நடந்து காட்டுப் பிரதேசத்தை அடைந்தாள். தான் பிறந்த நாட்டின் எல்லையைத் தாண்டிச் செல்லும் போது அவள் மனசுக்கு மிகவும் வேதனையாயிருந்தது. அந்த நாட்டு இளவரசியான அவள் அநாதையைப் போல் கால்நடையாக அல்லவா தேசத்தைவிட்டு ஓடும்படியாகி விட்டது!

அப்பொழுது எங்கும் கவிந்து கொண்டிருந்த இருள் கொஞ்சம் கொஞ்சமாக விலகியது. கமலத்தின் மனசில் கவிந்திருந்த கவலையும் விலகியது. நெடுந்தூரம் நடந்த அலுப்பும் இருந்த இடம் தெரியாமல் மறைந்தது. சூரியன் உதயமாகித் தன் பொன்னிறக் கிரணங்களை வீசி மரங்களையும் மலைகளையும் அழகுபடுத்தினான். காட்டிலிருந்த அடர்ந்த செடிகொடிகள் மேலும் புல் நுனிகளிலும் இரவில் விழுந்த பனி சூரிய ஒளி பட்டு வைரத் துகள்போல் பிரகாசித்தன. கமலம் ஒரு பாறையின் மேல் அமர்ந்து இந்த இயற்கைக் காட்சியைத் தன்னை மறந்து பார்த்தாள். (தொடரும்)




# கோத்ரேஜ் வதனி

சரசமான விலைக்கு
உயர்தர சோப்பு

கோத்ரேஜ் சோப்ஸ், லிமிடெட்.

---

## தி பாலூஸேரி பெனிபிட் சிட் பண்டு லி-ட்.

தந்தி: EVERMANS] (இந்தியாவில் இணைக்கப்பட்டது) [போன்: 85834

நெ. 3, சிங்கராச்சாரி தெரு, திருவல்லிக்கேணி, மதராஸ் - 5

### மாதச் சீட்டுகள்

சந்தா செலுத்தும் கடைசி தேதி 9-2-1952 ★ ஏலத் தேதி 16-2-1952

ஜனவரியில் ஆரம்பமான சீட்டுக்குத் தேவைக்கு அதிகமான சந்தாதாரர்கள் சேர்ந்து விட்டபடியால் பழைய வாடிக்கைக்காரர்கள் புதிய மெம்பர்கள் மற்றும் நேயர்களின் சௌகரியத்தை உத்தேசித்து இன்னொரு புதிய சீட்டு ஆரம்பித்திருப்பதை தெரிவித்துக் கொள்கிறோம். இப்புதிய சீட்டு B முதல் F வரை ஐந்து வகுப்புகளாக பிப்ரவரி மாதத்திலிருந்து ஆரம்பமாகும்.

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| B | கிளாஸ் டிக்கெட் | ரூ. | 2500/- | மாதம் | ரூ. | 100/- |
| C | ,, ,, | ரூ. | 1250/- | ,, | ரூ. | 50/- |
| D | ,, ,, | ரூ. | 625/- | ,, | ரூ. | 25/- |
| E | ,, ,, | ரூ. | 500/- | ,, | ரூ. | 20/- |
| F | ,, ,, | ரூ. | 375/- | ,, | ரூ. | 15/- |

ரூ. 25க்கும் அதற்கு மேற்பட்ட தொகைக்கும் இந்தியாவிலுள்ள அங்கீகரிக்கப்பட்ட பாங்கிகளின் செக் பெற்றுக் கொள்ளப்படும். அதற்குக் குறைந்த தொகைகளை மணியார்டர் அல்லது இந்தியன் போஸ்டல் ஆர்டர் மூலம் அனுப்பலாம். புதியதாகச் சேர விரும்புவோர் சீக்கிரமாகவே சேரக் கேட்டுக்கொள்ளப் படுகின்றனர். வேண்டுவோருக்கு இலவசமாக நிபந்தனைகளும் விண்ணப்ப பாரங்களும் அனுப்பப்படும்.

(போர்டாரின் உத்திரவுப்படி)

எம். வி. சுப்ரமணியம்
மானேஜிங் டைரக்டர்.




## துருக்கி—9

துருக்கியர்களுக்கு ஏற்பட்ட சோதனைகள் அத்துடன் முடிந்து விடவில்லை. துருக்கி, பாரசீகம், ஈராக் தேசங்களில் உள்ள முப்பது லட்சம் கூர்தியர்களில் பாதிப் பேர் துருக்கியில் வசித்து வந்தார்கள். அவர்கள் தங்களுக்குப் பிரத்தியேகமாகச் சுதந்திரம் அளிக்க வேண்டும் என்று பலமாகக் கிளர்ச்சி செய்யலாயினர்.

1925—ல் துருக்கியைச் சேர்ந்த கூர்தியர் பிரதேசத்தில் பெரும் புரட்சி பீறிட்டெழுந்தது. அந்தப் புரட்சியைச் சில மத வெறியர்களே தூண்டி விட்டிருக்க வேண்டும் என்று துருக்கியர்கள் கருதினர்.

எனவே, பொதுஜனங்களைத் தூண்டிவிடுவதற்கு மதத்தைக் கருவியாக உபயோகிப்பது தேசத் துரோகக் குற்றம் என்று கெமால் பாஷா பிரகடனம் செய்தார். மசூதிகளில் துருக்கிக் குடியரசுக்கு விரோதமாகப் பிரசாரம் நடக்கக் கூடாது என்றும் நாடெங்கும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டது.

அவ்வாறு பிரசாரம் செய்த கூர்தியர்களை ஒடுக்கும் விஷயத்தில் கடுமையான அடக்குமுறைகளைக் கைக்கொள்ளக் கெமால் பாஷா சிறிதும் தயங்கவில்லை. அவர்கள் மீது கொண்டு வரப்பட்ட வழக்குகளை விசாரிப்பதற்காக விசேஷக் கோர்ட்டுகள் அமைக்கப்பட்டன. மேற்படி கோர்ட்டுகளின் தீர்ப்புக்கு இணங்க கூர்தியர்களின் தலைவர்களில் பலர் தூக்கிலிடப்பட்டார்கள்.

தூக்கு மேடையில் ஏறிய கூர்தியர்கள் 'சுதந்திர கூர்திஸ்தான் வாழ்க' என்று கோஷம் செய்துகொண்டே உயிர் நீத்தனர்.

இவ்வாறாக, தங்களுடைய சுதந்திரத்துக்காகப் பல ஆண்டுகள் போரிட்ட துருக்கியர்கள். அதே சுதந்திரத்துக்காகப் போராடிய கூர்தியர்களைத் தூக்கிலிட நேர்ந்தது!

1929-ம் ஆண்டில் மறுபடியும் கூர்தியர்கள் புரட்சி செய்யலாயினர். முன்போலவே மீண்டும் அதைத் துருக்கி சர்க்கார் பலாத்காரமாக அடக்கி விட்டனர்.

எனினும் கூர்தியர்களின் இயக்கம் இன்றளவும் துருக்கிக்குப் பெரும் தலைவலியாக இருந்து வருகிறது.

துருக்கியின் சுதந்திரத்துக்கும் முன்னேற்றத்துக்கும் கெமால் பாஷாவே காரண புருஷர் என்றாலும், சர்வாதிகாரம் அளிக்கப்பட்ட அவர் அரசியல் எதிரிகள் விஷயத்தில் கொடூரமாக நடந்து கொண்டார் என்றே சரித்திரம் தீர்ப்புக் கூறும்.

துருக்கியை உருவாக்குவதில் உதவி புரிந்த பிரமுகர்கள் கூடக் கெமால் பாஷாவின் கோபத்துக்கு இலக்கு ஆகாமல் தப்ப முடியவில்லை. துருக்கியின் சுதந்திரப் போரில் ஈடுபட்ட பல தலைவர்களும் இராணுவ தளபதிகளும் கூடக் கெமால் பாஷா சர்க்காரால் தண்டிக்கப் பட்டனர். சில பிரமுகர்கள் தூக்குத் தண்டனையும் விதிக்கப்பட்டார்கள்.

இவற்றைத் தவிர, கெமால் பாஷாவின் சீர்திருத்தங்களின் வேகமும் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது!

மத சம்பந்தமான விடுதிகள் எல்லாம் மூடப்பட்டதுடன், அவற்றின் சொத்துக்களும் பறிமுதலாயின. இஸ்லாம் மதக் குருக்கள் அவர்களுடைய பிரத்தியேக உடைகளைக் கைவிட்டு விடவேண்டும் என்று உத்தரவிடப்பட்டது. அவர்கள் மற்றவர்களைப் போல் உழைத்தே ஜீவனம் செய்ய வேண்டும் என்றும் கெமால் பாஷா கட்டளையிட்டார்.

முஸ்லிம் மதக் கல்விச் சாலைகள் மூடப்பட்டன. கல்விச் சாலைகளில் மத போதனை கூடாது என்றும் கட்டளை பிறந்தது. மேற்படி கட்டளையை ஏற்க மறுத்த கல்விச் சாலைகளையும் கலாசாலைகளையும் மூடிவிடும்படி சர்க்கார் உத்தர விட்டார்கள்.

துருக்கி தேசத்தின் சட்டங்கள் எல்லாம் புரட்சிகரமான முறையில் மாற்றப்பட்டன. ஸ்விட்ஜர்லாந்து, இத்தாலி, ஜெர்மனி முதலிய நாடுகளைப் பின்பற்றி ஸிவில், கிரிமினல், வர்த்தக சம்பந்தமான சட்டங்கள் திருத்தப்பட்டன.

அந்த நாட்டில் வெகு காலமாக அமுலில் இருந்து வந்த பல தார மணம் அடியோடு தடுக்கப்பட்டது.

இஸ்லாம் மதக் கோட்பாடுகளை அனுசரித்து அதுவரையில் ஓவியம், சிற்பம் முதலிய கலைகளுக்கு இடம் இராமலிருந்தது. அவை இஸ்

ளாம் மதக் கொள்கைக்கு விரோதமாக மனித உருவங்களைச் சித்திரிப்பவை அல்லவா?

ஆனால் கெமால் பாஷா காலத்தில் மேற்படி தடை நீங்கியது. அத்துடன் அந்தக் கலைகளின் வளர்ச்சிக்கான முறைகளும் கைக் கொள்ளப் பட்டன; சித்திர, சிற்பக் கலைச் சாலைகள் ஆரம்பிக்கப்பட்டன.

துருக்கியின் சுதந்திரப் போரில் துருக்கிப் பெண்களும் தீவிரப் பங்கு எடுத்துக் கொண்டதால், கெமால் பாஷா அவர்களை மறக்கவில்லை. அவர்கள் கட்டுண்டு கிடந்த பல்வேறு தளைகளையும் அகற்ற உறுதி கொண்டார்.

பெண்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காக ஒரு சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. எல்லா சர்க்கார் உத்தியோகங்களிலும் அவர்களுக்குச் சகல உரிமைகளும் உண்டு என்று சர்க்கார் பிரகடனம் செய்தார்கள்.

முதல் முதலாக, கெமால் பாஷா பர்தா முறையை ஒழிக்கத் தீர்மானித்தார். பர்தா முறை எப்போது ஒழியும் என்று ஏங்கிக் கொண்டிருந்த துருக்கிப்பெண்மணிகள், அதை ஒழிப்பதில் கெமால் பாஷாவைக் காட்டிலும் அதிக உற்சாகம் காட்டத் தொடங்கினர்!

ஐரோப்பியரின் நடை, உடை, நடனம் முதலியவற்றைக் கூடக் கெமால் பாஷா துருக்கியில் புகுத்தத் தொடங்கினார்!

அதன் பலனாக வீட்டுக்குள்ளும் பர்தாவுக்கு உள்ளும் அடைக்கப்பட்டுக் கிடந்த துருக்கிப் பெண்கள் ஒரு சில வருஷங்களில் பேராசிரியர்களாகவும், நீதிபதிகளாகவும், வக்கீல்களாகவும், டாக்டர்களாகவும் பொறுப்பு ஏற்கலாயினர்!

இஸ்தான்புல் தெருக்களில் பெண் போலீசார் கூட நடமாடத் தொடங்கினர்!

இவ்வாறாக, சுதந்திரப் போரைத் தீவிரமாக நடத்திய கெமால் பாஷா, தமது புரட்சிகரமான சீர்திருத்தங்களை அமுலுக்குக் கொண்டு வரும் விஷயத்திலும் தீவிர முறைகளைக் கைக் கொண்டார்.

தெருக்களில் பரஸ்பரம் சலாம் செய்யக் கூடாது என்றும், கைகுலுக்குவது தான் நாகரிகம் என்றும் கூட வற்புறுத்தப்பட்டது!

துருக்கி பாஷை விஷயமாகத் கெமால் பாஷா கைக்கொண்ட சீர்திருத்தம்கூட மிகவும் புரட்சிகரமானதுதான்.

அதுவரையில் துருக்கி பாஷை அரபு லிபியில் எழுதப்பட்டு வந்தது. அவ்வாறு எழுதுவதில் சில கஷ்டங்கள் இருந்தன. எனவே கெமால் பாஷா துருக்கி பாஷைக்கு அரபு லிபியைக் காட்டிலும் எளிதாகத் தோன்றிய லத்தீன் லிபியை அமுலுக்குக் கொண்டு வர விரும்பினார்.

துருக்கி மக்கள் தங்களுடைய பாஷைக்கு லத்தீன் லிபியையே உபயோகிக்க வேண்டும் என்று இரண்டு வருஷ காலம் வரையில் தீவிரமாகப் பிரசாரம் நடந்தது; பல விடங்களில் லத்தீன் லிபியை வற்புறுத்திக் கற்றுக் கொடுக்கவும் தொடங்கினர்.


நரைமயிர்
நிரந்தரமாக
போய்விட்டது

நிரந்தரமாக நரையை நீக்குகிறது

Pearline Paris Ltd.
Bombay.

# இருமல், உபாதையளிக்கும் ஆஸ்துமா, மார்ச்சளி இவை மூன்றே நிமிஷங்களில் அகற்றப் படுகின்றன.

ஆஸ்துமா, மார்ச்சளி தாக்குதலால் மூச்சுத் திணறி தூக்கமின்றி அவதியுறுகிறீர்களா! அதிகமாக இருமுவதால் பிராணவஸ்தையாக இருக்கிறதா! பலஹீன உணர்ச்சியினால் வேலை செய்ய அசக்தராகவும், குளுமையான வஸ்துக்களையும் சிற்சில உணவுகளையும் உட்கொள்ள முடியவில்லையா!

எவ்வளவு நாட்களாக உபாதையுற்று எதை உபயோகித்திருப்பினும் சரி, மெண்டாகோ ஓர் புதிய நம்பிக்கையை அளிக்கும். மயக்க மருந்து, புகை பிடித்தல், இஞ்சக்ஷன், ஆட்டோமைஸர் இவை தேவையில்லை. செய்ய வேண்டியதெல்லாம் ருசியற்ற இரண்டு பில்லைகளை சாப்பாட்டின்போது உட்கொள்ள வேண்டியதே. உபத்திரவங்கள் மாயமாக அகன்றுவிடும். மூன்றே நிமிஷங்களில் மெண்டாகோ இரத்தத்துடன் கலந்து வேலை செய்யத் தொடங்கி கபத்தைக் கரைத்து சிரமம் இன்றி ஸ்வாஸத்தை அபிவிருத்தி செய்து முதல் நாள் இரவிலேயே நல்ல நித்திரையை அளித்து விரைவில் பல வருஷங்கள் யௌவன உணர்ச்சியையும் பலத்தையும் பெறுவீர்கள்.

### 2 ஆண்டுகளாக ஆஸ்துமா இல்லை

மெண்டாகோ அநேகமாக உடனே குணமளித்து ஸ்வாசத்தை இலகுவாக்குவது மட்டுமின்றி எதிராக தாக்குதல் ஏற்படாது செய்கிறது. உதாரணமாக மிஸ்டர் ஜே.ஆர். இருமல் மூச்சுத் திணறலால் இரவு தூக்கமின்றி 40 பவுண்டு எடை குறைந்து இறந்துவிடுவார் என எதிர்பார்க்கப்பட்டது. மெண்டாகோ ஆஸ்துமாவை முதல் நாளே நிறுத்தி விட்டது. இரண்டு வருஷங்களில் அத்தொந்தரவே அவருக்கு மீண்டும் ஏற்படவில்லை.

### பணம் வாபஸ் உத்தரவாதம்

மெண்டாகோ முதல் வேளை சாப்பிட்டதும் நேரடியாக இரத்தத்துடன் கலந்து ஆஸ்துமாவை ஒழிக்கிறது. மெண்டாகோ அதிவிரைவில் வயதில் பல வருஷம் யௌவன உணர்ச்சி, பலம் இவற்றை அளிக்கிறது. வாபஸ் உத்தரவாதத்தின் கீழ் மெண்டாகோ உபயோகித்துப் பார்த்து தீர்ப்பளியுங்கள். மெண்டாகோ சாப்பிட்ட பின் பூரண குணம் பெற்று, திருப்தியளிக்காவிடில் காலிப் பெட்டியை அனுப்பினால் முழுத் தொகையும் வாபஸ் செய்யப்படும். இன்றே மருந்து வியாபாரியிடமிருந்து மெண்டாகோ வாங்குங்கள். இன்றிரவு எப்படித் தூங்குகிறீர்கள், மறு நாள் காலை எவ்விதமான தெம்புணர்ச்சி ஏற்படுகிறதென்பதையும் பாருங்கள். உத்தரவாதம் உங்களுக்கு நல்ல பாதுகாப்பை அளிக்கிறது.

**Mendaco**
**மெண்டாகோ**

★ ஆஸ்துமா ★ மார்ச்சளி நோய் ★ ஹே ஜுரம் இவற்றை அறவே அகற்றுகின்றது

---

# மலச்சிக்கலை
## ஒரே இரவில்
## அகற்றுகிறது






ப்ரூக்லாக்ஸ்

**ருசி மிகுந்த சாக்கலெட் மலமிளக்கி**

ஏஜெண்டுகள்:

ஓரியண்டல் மெர்க்கண்டைல் ஏஜென்ஸி

99 - A. அரண்மனைக்காரத் தெரு, மதராஸ் - 1




## 9. "இது என்ன சத்தம்?"

வேதாவின் கண்கள் ஆவலோடு பொன்னியை நோக்கின. ஆனால் அதில் ஒரு அர்த்தமற்ற பீதியும் பரபரப்பும் கலந்திருந்தன.

"நீ இன்னும் தூங்கவில்லையா, வேதா!" என்று பொன்னி மெதுவாக அவள் தோளைத் தொட்டுக் கேட்டாள்.

"இல்லை. எனக்கு எப்படித் தூக்கம் வரும்! நீ இன்றும் வருவாய் என்று எண்ணித்தான் தூங்காமல் காத்துக் கொண்டிருந்தேன். ஆனால் பொன்னி, நடு இரவில் நாம் இப்படிச் சந்திப்பது ரொம்பத் தவறு. கடைசியில் இது ஏதாவதொரு பெரிய ஆபத்தில் கொண்டுபோய் விட்டுவிடும். பெரியம்மாவும் செங்கம்மாவும் இதைக் கண்டு விட்டால்......" என்று சொல்லி நிறுத்தினாள்.

"அவர்களால் கண்டுபிடிக்க முடியாது. வீணாகப் பயப்படாதே. இந்தப் பொன்னி சாதாரணப் பட்டவளா!" என்று அந்தரங்கத்தோடும் அன்போடும் சொல்லிவிட்டு, "நான் இப்பொழுது ஒரு சமாசாரம் கொண்டு வந்திருக்கிறேன். அது என்னவென்று உனக்குத் தெரியுமா!" என்று பொன்னி சிரித்துக்கொண்டே கேட்டாள்.

"என்ன!" என்றாள் வேதா ஆவலுடன்.

"நான் இன்று காலையில் எங்கே போயிருந்தேன் என்று உனக்குத் தெரியுமா!"

"எங்கே போயிருந்தாயோ! எனக்கு அது எப்படித் தெரியும்!"

"நந்தி துர்க்கத்திற்குப் போயிருந்தேன்."

"சரிதான். ஏதாவது சாமான் வாங்கப் போயிருப்பாய்."

"ஆமாம். சாமான் வாங்கத்தான் போயிருந்தேன். ஆனால் வீட்டுச் சாமான்களோடு உனக்காக ஒருவரிடம் போய் மன்றாடி ஒரு பொருளையும் வாங்கி வந்தேன்."

"எனக்காகவா! யாரிடம் போய் என்ன பொருள் வாங்கிக் கொண்டு வந்தாய்!" என்று ஆவலோடு கேட்டாள் வேதா.

"அவசரப்படாதே! நான் நந்தி துர்க்கம் போனேனா! அப்படியே டாக்டர் பரசுராமனையும் பார்க்கலாமென்று அவர் வீட்டுக்குப் போனேன்."

"நிஜமாகவா...! அவரைப் பார்த்தாயா...!" என்று துடியாகத் துடித்துக் கொண்டே பொன்னியின் தோளை உலுக்கினாள் வேதா.

"பதட்டப் படாதே! ஒவ்வொன்றாகத்தானே சொல்ல வேண்டும்! அவரைப் பார்த்தேன். அவரும் என்னைப் பார்த்தார்..."

"ஏதாவது உன்னிடம் சொன்னாரா!"

"சொன்னார். வா அம்மா, பொன்னி! உன் பாட்டிக்கு உடம்பு எப்படியம்மா இருக்கிறது என்று கேட்டார்."

"அப்புறம்......!"

"என் பாட்டிக்கு உடம்பு ஒன்றுமில்லை. வேதாவிற்குத்தான் ஒரு நல்ல மருந்தாக வேண்டும் என்று கேட்டேன்!" என்று சொல்லிவிட்டு வேதாவின் முகத்தைப் பார்த்தாள் பொன்னி.

"எனக்கு மருந்தா! எதற்கு...!" என்று கேட்டாள் ஆச்சர்யத்துடன் வேதா.

"எதற்கா! எல்லாம் ஒரு காரணமாகத்தான் கேட்டேன். கடைசியில் உனக்கு ஒரு நல்ல மருந்தாக இதற்குள் போட்டுக் கொடுத்திருக்கிறார்!" என்று சொல்லிக் காகித உறையை அவளிடம் காட்டினாள் பொன்னி.

"இது என்ன, மருந்தா! எனக்கு என்ன வியாதி!" என்று சொல்லிப் பொன்னியின் கையிலிருந்த காகித உறையை வாங்கி அதைத் திருப்பித் திருப்பிப் பார்த்தாள்.

"உனக்கு என்ன வியாதியா! அது உனக்கு எப்படித் தெரியும்! ஆனால் உன்னுடைய வியாதியைப் போலவே அந்த டாக்டருக்கும் ஒரு வியாதி......!"

"பொன்னி, நீ சொல்லுகிறதே எனக்கு விளங்கவில்லை..." என்றாள் ஆயாசத்துடன் வேதா.

"விளங்குமா! விளங்காதுதான். உன்னிடம் அந்த டாக்டருக்குத் தலை போகிற ஆசை. உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டுமென்று அவருக்கு எவ்வளவு கொள்ளை ஆசை தெரியுமா!" என்றாள் பொன்னி தன் கண்களை ஒரு சிமிட்டுச் சிமிட்டி அகல விரித்தவாறு.

வேதாவின் முகம் சட்டென்று சிவந்தது. அவள் முகத்தில் அது வரையில் காணாத நாணமும் வெட்கமும் தவழ்ந்தன. "அவருக்கு என் மீது ஆசையா!" என்று கேட்டாள் உணர்ச்சி நிறைந்த ஆழ்ந்த குரலில்.

"ஆமாம்! நாளைக்கே வேண்டுமானாலும் அவர் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ளத் தயாராய் இருக்கிறார், வேதா! அதில் உனக்கு இஷ்டம் தானே...!" என்று கேட்டாள் பொன்னி.

வேதா பொன்னியின் இரு கரங்களையும் பிடித்துக் கொண்டாள். அப்பொழுது அவள் ஒரு மெய் மறந்த நிலையிலிருந்தாள் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால் வெய்யிலின் கொடுமை அதிகமாக அதிகமாக மலர் எப்படிக் கொஞ்சம் கொஞ்சமாக வாடுகிறதோ, அப்படித்தான் வேதாவின் மலர்ந்த தாமரை போலிருந்த முகமும் கொஞ்சம் கொஞ்சமாக வாடிச் சுருங்கியது. அவளுடைய அழகான கண்களில் சோகமும் பீதியும் நிரம்பின. "இது முடியுமா!—எப்படி முடியும்! முடியாது, பொன்னி! முடியாது!" என்று தழுதழுத்த குரலில் கூறினாள் வேதா.

"ஏன் முடியாது, வேதா...!"

"ஏன்! ஏனென்றால், அது மிகவும் தப்பு. தயவு செய்து என்னை வற்புறுத்தாதே, பொன்னி!" என்றாள் வேதா.

பொன்னி ஏளனமாகச் சிரித்து விட்டு, "தெரியும், எனக்குத் தெரியும்! நீ வீணாகப் பயப்படுகிறாய். இந்த உலகத்திலுள்ள ஆண் பிள்ளைகளெல்லாம் ராட்சதர்களை விடப் பொல்லாதவர்கள் என்று மரகதமும் செங்கம்மாவும் ஆதியிலிருந்தே உன் மனதில் உரையேற்றி வைத்திருக்கிறார்கள். அது பைத்தியக்காரத்தனம். உலகத்தில் எல்லா மனிதர்களுமே பொல்லாதவர்களல்ல. நூற்றில் ஒரு மனிதன் இருக்கலாம், மனிதத்தன்மை இல்லாமல். ஆனால் டாக்டர் பரசுராமனைப் போல் நல்ல மனிதரை நாம் பார்க்க முடியாது. அவரை நீ முதல் தடவை பார்த்ததிலிருந்தே தெரிந்து கொண்டிருப்பாய் என்று நினைத்தேன். அவரோடு அன்று இரவு நீ பேசியதற்கு உன் பெரியம்மா மரகதம் உன்னைக் கண்டித்ததை அவரிடம் சொன்னேன். அவர் அப்படியே வருத்தத்தால் சோர்ந்து போய் விட்டார்" என்றாள்.



வந்தவர் ('பார்க்குப் பெஞ்சியில் உட்கார்ந்ததும் திடுக்கிட்டு எழுந்து):—அடடா! புதிதாக வர்ணம் பூசியிருக்கிறார்களா? உடைகளெல்லாம் வீணாகப் போய் விட்டதே! த்சோ, த்சோ!

தோட்டக் காவற்காரன்:— ஸார், போனால் போகட்டும். நாளைக்கு மறுபடியும் பெஞ்சிகளுக்கு வர்ணம் பூச வரப்போகிறார்கள்.

"நீ அதை அவரிடம் சொன்னாயா!"

"சொன்னேன். சொன்னால் என்ன! அவர் பைத்தியக்காரரில்லை. நீ இனிமேலாவது அவரைப் பற்றிச் சரியாய்த் தெரிந்து கொள். உன் பெரியம்மா மரகதத்தையும் இந்த வேதாளம் செங்கம்மாவையும் சரியானபடி தண்டிக்க அவர் சமயம் பார்த்துக் கொண்டிருக்கிறார். அது போகட்டும், வேதா! உனக்கு அவரிடம் துளிக்கூட ஆசை இல்லையா...! உண்மையைச் சொல்லு. எனக்குத் தெரியும், உன் மனதில் என்ன இருக்கிறது என்று!" என்றாள் பொன்னி.

வேதா மௌனமாக உட்கார்ந்திருந்தாள். பொன்னி கொடுத்த காகித உறை அவள் கையிலிருந்தது. பொன்னிக்கு எத்தகைய பதில் சொல்வதென்று அவளுக்குத் தெரியவில்லை.

"வேதா! நீ என் வார்த்தையைக் கேட்கா விட்டால் இந்த வீட்டில் நான் எதற்காகக் கஷ்டப்பட்டுக் கொண்டிருக்க வேண்டும்! இதோ பார், மறுபடியும் நீ டாக்டரைப் பார்க்க விரும்புகிறாயா, இல்லையா என்பது எனக்குத் தெரிய வேண்டும். அவரை மறுபடியும் சந்திப்பதில் உனக்கு இஷ்டம் தானே!" என்றாள் பொன்னி.

"அவரை மறுபடியும் பார்க்க ஆசைதான். ஆனால் அது எப்படி முடியும்......!" என்றாள் அடக்கமான குரலில் வெட்கத்துடன் வேதா.

"எப்படி முடியுமா! அதெல்லாம் என்னுடைய பொறுப்பு. நீ கவலைப்படாதே!"

"பொன்னி, ஆனால்......" என்றாள் நடுங்கிய குரலில் வேதா.

"என்ன ஆனால்...... ஏன் இப்படிப் பயந்து நடுங்குகிறாய்! இப்படிப் பயந்தால் காரியமே கெட்டு விடும்......"

"இல்லை, பொன்னி! பெரியம்மா......" என்று சொல்லி அச்சத்தோடு பொன்னியைப் பார்த்தாள்.

"எனக்குத் தெரியும். உனக்குக் கொஞ்சம் கூடத் தைரியம் கிடையாது. உனக்கு டாக்டரிடம் காதல் இருந்தால் அவரை அடையத் தைரியமும் துணிவும் வேண்டும். ஆசை மாத்திரம் இருந்து புண்ணியமில்லை. உன் பெரியம்மாவின் கட்டுப்பாட்டிற்கும் மீறி உன் மனது டாக்டரை விரும்புகிறது. மரகதமும் செங்கம்மாவும் ஆண் பிள்ளைகளெல்லாம் மிருகத்தைவிடக் கேவலமான குணமுள்ளவர்கள் என்று உனக்கு மனதில் ஒரு பீதியை ஏற்படுத்தி வைத்திருந்தும் உன் மனது எப்படியோ அந்த டாக்டரை விரும்புகிறது. இல்லையா! இதோ பார். நான் அவரிடமிருந்து உனக்காக இந்தக் கடிதத்தை வாங்கி வந்தேன். அதைப் பிரித்துக்கூடப் படிக்க மாட்டேன் என்கிறாயே......!" என்றாள் பொன்னி.

வேதா அந்தக் கடிதத்தின் உறையை மேலும் கீழுமாகத் திருப்பிப் பார்த்தாள்.

அந்த உறையைப் பிடித்திருக்கும் வேதாவின் மெல்லிய விரல்கள் துடித்தன. அவள் மனதில் என்றுமில்லாத ஒரு புதிய உணர்ச்சி ஏற்பட்டது. "பொன்னி! இத்தனை நாள் வரையில் எனக்கு ஒருவருமே கடிதம் எழுதியதில்லை. இதுதான் எனக்கு முதன் முதலாக வந்த கடிதம். இதை



ான் வாங்கிக் கொள்ளலாமா! பெரியம்மா
க்கு இது தெரிந்தால் மிகவும் கோபப்படு
ாளே !'' என்றாள்.

''உன் பெரியம்மாவைச் சமுத்திரத்தில் பிடித்
த் தள்ளு, வேதா! இனிமேல் நீ அவளுக்காகப்
யப்பட வேண்டாம். உனக்காகப் பரிந்து பேச
ானும் டாக்டரும் இருக்கிறோம். எப்படியாவது
ந்தப் பிசாசுகளிடமிருந்து உன்னை மீட்கத்தானே
ாங்கள் இருக்கிறோம்!'' என்றாள் பொன்னி ஆத்
ிரத்துடன்.

வேதாவின் கண்களில் நிரம்பி இருந்த பயமும்
ஞ்சலமும் மறையவில்லை. பொன்னி அவளைத்
ன்னோடு அணைத்துக் கொண்டாள். ''வேதா!
ான் சொல்வதைக் கேள். இத்தனை வருடமாக
ந்த வீட்டில் உன்னை அடைத்து வைத்ததினால்
ந்தப் பேய்களிடம் நீ எவ்வளவு தூரம் பயப்
டுகிறாய் என்று எனக்கு இப்பொழுதுதான்
தரிந்தது. ஆனால் நான் அவர்களுக்காகப் பயப்
ட மாட்டேன். அவர்களுடைய அதிகாரத்திற்
கெல்லாம் நான் கட்டுப்பட்டவளில்லை. முதலில்
அந்தக் கடிதத்தைப் பிரித்துப் படி. அவர்
னக்கு என்ன எழுதி இருக்கிறார் என்று தெரிந்து
காள்ள எனக்கு எவ்வளவு ஆவலாய் இருக்கிறது,
தரியுமா! ஆனால் நீ பிரித்தால்தானே!'' என்றாள்.

''இதை நீதான் எனக்குப் படித்துச் சொல்
லேன்'' என்றாள் வேதா.

''எனக்குப் படிக்கத் தெரிந்தால் ஏன் இப்படி!
வேதா நீ வீட்டுக்குள்ளேயே அடைந்து கிடந்
தாலும் கொஞ்சமாவது எழுதப் படிக்கத்
தெரிந்துகொண் டிருக்கிறாய். என்னைப் போல்
காட்டுப்புறத்துப் பெண்ணைக் கவலையோடு படிக்க
வைக்கிறவர் யார்!'' என்று கூறினாள் பொன்னி.

வேதா மெதுவாக அந்தக் கடிதத்தின் உறை
யைக் கிழித்தாள். பொன்னி அங்கிருந்த சிம்னி
விளக்கை அருகில் எடுத்து வைத்துப் பிரகாச
மாக்கினாள். அந்த விளக்கின் மங்கிய ஒளியில்
கறுப்பு மையினால் அந்தக் கடிதத்தில் எழுதப்பட்
டிருந்த எழுத்துக்கள் முத்துக் கோத்து வைத்தது
போல் தெளிவாக விளங்கின.

நந்தி துர்க்கம், 9—4—36.

அன்பு மிக்க வேதா, உன் சிறிய தாயார்
சாரதா இறந்த அன்று இரவு நடந்தவைகளுக்
காக உன் பெரியம்மா மரகதத்தால் நீ தண்டிக்
கப்பட்டாய் என்று பொன்னியின் மூலமாக
நான் கேள்விப்பட்டேன். அதற்காக மிகவும்
வருந்துகிறேன். அந்தக் குற்றம்—அது குற்றமா
யிருந்தால் — என்னால் நேர்ந்தது. என்றால்
உனக்கு ஏற்பட்ட அந்தக் கஷ்டத்திற்காக மனம்

நொந்து வருந்துவதுதான் எனக்கு நானே அனுபவிக்கும் தண்டனையாகும்.

அன்புமிக்க வேதா, என்னை மன்னித்துவிடு. உனக்கு அங்கு ஏதேனும் கஷ்டங்கள் ஏற்பட்டதாக நான் கேள்விப்பட்டால் நான் துளிக் கூடச் சகிக்க மாட்டேன். நீ மனித வாசனையே எட்டாத பாதாளக் குகையில் சிறை வைக்கப் பட்டிருப்பது போலிருக்கிறாய். அதிலிருந்து உன்னை மீட்காவிட்டால், நீ மீண்டு வராவிட்டால் உன் வாழ்க்கையில் இன்பம், சந்தோஷம் என்னும் ஒளியையே நீ காண முடியாது.

உனக்குத் துணையாக இப்பொழுது பொன்னி இருக்கிறாள். அவள் நல்ல இருதயம் படைத்த பெண். இதை என்னி நான் இருதய பூர்வமாகக் கடவுளுக்கு நன்றி செலுத்துகிறேன். பொன்னி நல்ல பெண் மாத்திரமில்லை. உன் வயதுடைய இளம் பெண். உன் வயதிற்கேற்ற பெண்ணோடு பேசிப் பழகுவதினால் உன் மனதிற்கு அமைதியும், நம்பிக்கையும் சந்தோஷமும் ஏற்படும் என்று நம்புகிறேன். நீ பொன்னியைத் தாராளமாக நம்பலாம். அவளிடம் உனக்குள்ள குறைகளையெல்லாம் மனம் விட்டுச் சொல்லலாம். நல்ல மனதுடைய அவளிடம் உன் வாழ்க்கையையேகூட ஒப்படைத்து விடலாம்.

வேதா! நான் உன்னை மனமார விரும்புகிறேன். நீ என்னை அந்தரங்கத்தோடு நேசிப்பதானால் நான் உனக்காக எதுவும் செய்யச் சித்தமாய் இருக்கிறேன். உன்னை மறுபடியும், இன்னும் ஒரு தடவையாவது சந்திக்க வேண்டுமென்ற ஆவலும் துடிப்பும் எனக்கு அதிகமாக இருக்கிறது. நான் உனக்குள்ள கஷ்டத்திற்காக எவ்வளவு அனுதாபப் படுகிறேன் என்பதை வெறும் வார்த்தைகளால் விளக்க முடியாது. ஒருநாள் உன்னை அந்தக் கொடுமை நிறைந்த ஜீவன்களிடமிருந்து விடுவித்து என்னுடையவளாக்கிக் கொள்ள வேண்டுமென்ற ஆவலை நிறைவேற்றி வைக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

நம்முடைய இருதய பூர்வமான அன்பும் காதலும் இன்னும் உறுதியானதாகும்படி செய்ய எல்லா வகையிலும் பொன்னி உதவி செய்வாள்.

கண நேரமும் உன்னை மறவாத,
டாக்டர் பரசுராம்.

இந்தக் கடிதத்தைப் படித்ததும் வேதாவின் முகம் மலர்ந்தது. அவள் ஏதோ கனவுச் சுழலில் சிக்கியவள்போலப் பிரமித்து உட்கார்ந்திருந்தாள். "கடிதத்தைப் படித்துவிட்டாய். இப்பொழுதாவது தெரிந்ததா, அவர் உன்மீது எவ்வளவு ஆவல் வைத்திருக்கிறார் என்று!" என்று கேட்டாள் பொன்னி, வேதாவை ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டே. வேதா பொன்னிக்கு ஒன்றும் பதில் சொல்லவில்லை. ஆனால் அவள் கண்கள் அவள் மனதிலுள்ள உணர்ச்சியையும் ஆவலையும் பகிரங்கமாக எடுத்துச் சொல்லின.

"வேதா! நான் ஒன்று சொல்கிறேன். கேட்கிறாயா! நாளையதினம் ராத்திரி நீ டாக்டரைச் சந்திக்கிறாயா!" என்று கேட்டாள் மெதுவாக.

இதைக் கேட்டதும் வேதா திடுக்கிட்டாள். அவள் தன் கண்களை அகல விரித்து, "எப்படி....! எப்படி அவரைச் சந்திக்க முடியும்....!" என்றாள்.

"எப்படியா......! அதற்குத் தகுந்த ஏற்பாடு நான் செய்ய மாட்டேனா! நாளையதினம் ராத்திரி நான் உன்னைக் குருவிக்குளத்திற்கு, என் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போகிறேன். அங்கே டாக்டர் வந்து நமக்காகக் காத்திருப்பார்......" என்றாள் வியப்போடு வேதா.

"எப்படி இந்த இடத்தை விட்டு நாம் வெளியே போக முடியும்!"

"ஒருவருக்கும் தெரியாமல்......அதைப் பற்றி நீ ஒன்றும் கவலைப்பட வேண்டாம்."

"பெரியம்மா..." என்று இழுத்தாள் வேதா.

"மறுபடியும் உன் பெரியம்மாவைப் பற்றிப் பேசினால் எனக்குக் கோபம்தான் வரும். உன் பெரியம்மாவிற்கு இதெல்லாம் தெரியாதபடி நான் செய்வேன். அவர்கள் தூங்கும்பொழுது நாம் பின் பக்கத்து வழியாக வெளியே போய் விடிவதற்குள் திரும்பி வந்துவிடலாம்......"

வேதாவுக்கு இது அச்சமாகவும் ஆச்சரியமாகவும் இருந்தது. அவள் எவ்வளவு பயந்து நடுங்குகிறாள் என்பதைப் பொன்னி எளிதில் உணர்ந்து கொண்டாள்.

"பயப்படாதே, வேதா! நான் இருக்கிறேன். நெடுநாட்களாக இந்த வீட்டில் கூட்டில் அடைத்த கிளி போல் கிடக்கும் உனக்கு, வெளியே சென்று வருவது மனதிற்குக் கொஞ்சம் நிம்மதியாகவும் சந்தோஷமாகவும் இருக்காதா! என் வீட்டை நீ பார்க்க வேண்டாமா! உன்னைப் பார்த்து விட்டால் என் தாயாரும் பாட்டியும் எவ்வளவு சந்தோஷப்படுவார்கள், தெரியுமா! என் தாயாரையும் பாட்டியையும் பார்த்த பிறகுதான் உனக்கு, அவர்களுக்கும் இங்கு உன்னை ஆட்டி வைக்கும் உன் பெரியம்மா செங்கம்மா இவர்களுக்கும் உள்ள வித்தியாசம் தெரியும். சரி! நாழிகையாகி விட்டது. நான் படுக்கப் போகிறேன். நான் மறுபடியும் நாளை இரவு வருகிறேன். இந்தக் கடிதத்தைப் பத்திரமாக வைத்துக் கொள்......" என்று சொல்லிவிட்டுப் பொன்னி தன் அறைக்குப் போவதற்காக எழுந்தாள்.

"வேண்டாம், வேண்டாம். இந்தக் கடிதத்தை நீயே வைத்துக் கொள். நான் வைத்துக்கொள்ள மாட்டேன். அவர்கள் பார்த்து விடுவார்கள்" என்று வேதா படபடப்போடு சொல்லிக் கடிதத்தைப் பொன்னியிடம் கொடுத்தாள்.

"அதுவும் சரிதான். நான் உனக்காக இதைப் பத்திரப்படுத்தி வைத்துக்கொண்டிருக்கிறேன். ஒன்றையும் மறந்து விடாதே. நாளைய தினம் இரவு தயாராய் இரு" என்று சொல்லி விட்டுப் பொன்னி கிளம்பினாள்.

வேதா அவள் முகத்தையே ஆர்வத்தோடு பார்த்துக் கொண்டிருந்தாள். அந்தப் பார்வையில் எல்லையற்ற நன்றியறிதலும் ஆவலும் கலந்திருந்தன. பொன்னி வெளியே சென்று விட்டாள். வேதா சிறிது நேரம் வரையில் அவள் சென்ற பாதையையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு ஒரு நீண்ட பெருமூச்சு விட்டபடியே தன்னுடைய படுக்கையில் சாய்ந்தாள்.

பொன்னி மெதுவாகத் தன் அறையில் வந்து படுக்கையில் படுத்தாள். கடவுள் அருளால் அன்று எவ்விதக் கண்டத்திலும் சிக்காமல் சாமர்த்தியமாகக் காரியம் செய்து தப்பிவிட்டதில் அவளுக்குப் பரம திருப்தி. மறுநாள் எப்படி எப்படியெல்லாம் காரியங்களைச் சாமர்த்தியமாகச் செய்து முடிக்க வேண்டுமென்பதில் அவள் யோசனை சென்றது. தூங்காமலே யோசனையில் ஆழ்ந்தாள்.

திடீரென்று அந்த வீட்டிற்குப் பின்புறமிருந்து யாரோ சீழ்க்கை யடிப்பது போன்ற சப்தம் கேட்டது. அவள் பரபரப்போடு எழுந்து உட்கார்ந்தாள். மறுபடியும் அதேபோல் சீழ்க்கை யடிக்கும் சப்தம் கேட்டது. அவளுக்குச் சந்தேகமில்லாமல் யார் சீழ்க்கை யடிப்பது என்பது தெளிவாக விளங்கியது. ஆகவே, அவள் முகத்தில் ஒரு பிரகாசம் ஏற்பட்டது. பொன்னி முன்னிலும் அதிகப் பரபரப்போடு எழுந்து இருட்டில் தடவிக் கொண்டே அடிமேல் அடி வைத்துச் சத்தம் வந்த திசையை நோக்கி நடந்தாள். (தொடரும்)

BSY 474 TAM.

# சக்கரங்கள் சுழன்றுகொண்டே இருக்க

எண்ணெய் இந்த நாட்டுக்கு வந்து சேர்ந்தவுடன் கடலுக்கருகேயுள்ள ஏழுபிரதான துறைமுகங்களில் பர்மா-ஷெல் ஸ்தாபனத்தாரின் பெரிய டாங்குகளில் சேகரித்து வைக்கப்படுகிறது. டாங்குகளில் வைத்திருப்பதால் யாதொரு பிரயோஜனமும் இல்லாதது மட்டுமல்ல; அத்தியாவசியமான சேகரிப்பு இடவசதியும் உபயோகமற்றுவிடுகிறது. நாட்டிலுள்ள நகரங்களுக்கும் கிராமங்களுக்கும் எவ்வளவு துரிதமாக முடியுமோ அவ்வளவு துரிதமாக எண்ணெய் வினியோகம் செய்வது எங்கள் வேலை. தொழில் சாலையின் இயந்திரங்கள் இயங்கிக் கொண்டே இருக்கவும் கிராம விளக்குகள் எரிந்து கொண்டே இருக்கச் செய்வதும் எங்கள் பொறுப்பு.

ஒவ்வொருவருக்கும் தேவையான எண்ணெயை சரிவரக் கிடைக்கச் செய்வதால்தான் எங்கள் வேலையைச் சரிவர செய்ததாகும். தொழிற்சாலை தேவையான பொருள்களை ஒழுங்காகத் தயாரிக்க நாங்கள் லூப்ரிகேஷன் எண்ணெய் காலந்தவறாது சப்ளை செய்ய வேண்டும். வயல்களில் டிராக்டர்கள் சரிவர வேலைசெய்ய விவசாயிகளுக்கு டிராக்டர் எண்ணெயைத் தவறாது வினியோகிக்க வேண்டும். மோட்டார் வண்டிகளுக்குத் தேவையான பெட்ரோலும், ஷெல் X-100 மோட்டார் எண்ணெயும், கிராம வாசியின் விளக்கேரிய கிரோஸின் எண்ணெயும் தவறாது கிடைக்கச் செய்ய வேண்டும்.



இதை நாங்கள் செய்ய முயற்சிக்கிறோம். அது எங்கள் வேலை-ஆனால் சிலர் நினைப்பதுபோல அவ்வளவு சுலபம் அல்ல. சரியான எண்ணெயை, சரியான இடங்களுக்கு சரியான சமயத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க மிக உழைப்பும் ஏராளமான சிப்பந்திகளும் அதிக தொழில் நுட்பஞானமும் தேவை.

**பர்மா-ஷெல்...**

**பாரத நாட்டின் வாழ்க்கையில்**

**ஈடுபட்டிருக்கிறது**

**BURMAH-SHELL...IN INDIA'S LIFE AND PART OF IT**




## —விஸ்டம் உபயோகியுங்கள்

### சரியான உருவில் அமைந்துள்ள நைலான் டூத் பிரஷ்

வெண்மையான, பிரகாசமான பற்கள், நடுத்தர வயதினருக்கு யௌவனத் தோற்றத்தையும், திட ஆரோக்கியத்தையும் அளிக்கிறது. விஸ்டம் டூத் பிரஷ் உங்களுக்கு உதவியளிக்கட்டும். இதன் விசேஷ அமைப்புடைய நைலான் குஞ்சங்களும், சௌகரியமான கைப்பிடியும் பற்களை சுலபமாகவும் துப்புரவாகவும் சுத்தம் செய்ய உதவுகின்றன. பற்களுக்குக் கேடு உண்டாகும் இக்கட்டான பல் இடுக்குகளிலும் விஸ்டம் பிரஷ் புகுந்து சுத்தம் செய்கிறது. விஸ்டம் பிரஷ்கள், சிறுவர்களுக்கும், பெரியவர்களுக்கும் ஏற்ற சைஸ்களில் தூசி தும்புப் புகமுடியாத உறைகளில் எல்லாக் கடைகளிலும் விற்கப்படுகின்றன.

டிஸ்ட்ரிபியூடர்கள்: ஜே. எல். மாரிசன், ஸன் & ஜோன்ஸ் (இந்தியா) லிட்., தபால் பெட்டி 6527, பம்பாய் 26 & கிளைகள்.

WT.27




ரா. வி.

(சென்ற வாரத் தொடர்ச்சி)

**த**ம் அருகே துரை நின்று கொண்டிருப்பதைக் கண்டதும் ஸ்டேஷன் மாஸ்டர் என்ன செய்வது என்று ஒன்றும் தோன்ருமல் சிறிது நேரம் பேயறைந்தவர் போல் நின்ருர். பிறகு கோட்டை மாட்டிக்கொண்டு பித்தான்களைப் போட்ட வண்ணம் அவசரம் அவசரமாக ஆபீஸருக்கு 'சலாம்' செய்து விட்டு "எஸ், ஸார்!" என்ருர்.

துரை வருத்தம் கலந்த குரலில், "உம் காரணமாக நான் வண்டியிலிருந்து இறங்கும்படி ஆகிவிட்டது! எத்தனை நேரமாக உம்மைக் கூப்பிட்டுக் கொண்டிருக்கிறேன், தெரியுமா? ஆனுல் நீர் வந்தால்தானே?" என்ருர்.

ஸ்டேஷன் மாஸ்டர் கெஞ்சும் குரலில், "ஸார்! ஒரு கிழவன்......" என்று இழுத்தார்.

"நீர் கிழவனை வண்டியில் ஏற்றியதை நான் பார்த்துக் கொண்டு தானிருந்தேன். அதற்கப்புறம் நீர் எங்கே போய் விட்டீர்?"

"லயன் க்ளியருக்கு, ஸார்!"

ஸ்டேஷன் மாஸ்டர் அப்பொழுதும் தம் கோட்டின் ஒரு பித்தானைப் போட்டுக் கொண்டுதா னிருந்தார். ஆனுல் கோட்டு ரொம்ப ரொம்பப் பழையது. எவ்வளவு நாட்களாக அவர் அதைப் போட்டுக் கொள்ளவில்லையோ, தெரியாது! இதன் மத்தியில் அவருடைய வயிற்றின் சுற்றளவு சற்று அதிகரித்திருந்தது. எப்படியோ இழுத்துப் பிடித்துக் கோட்டின் பித்தான்களைப் போட்டுக் கொண்டு விட்டார். ஆனுல் ஒரு நிமிஷம் ஆவதற்குள்ளாகப் பட்டென்று தெறித்துப் பித்தான் கீழே விழுந்து விட்டது. அதைப் பார்த்த துரைக்குச் சிரிப்பு வந்து விட்டது. அவர் சிரித்த வண்ணமே, "உம் ஆபீஸ் ரிஜிஸ்தரைப் பார்ப்போம், வாரும்!" என்ருர்.

கடைசியில் துரை 'நோட்' எழுத உட்கார்ந்தார். பேனுக் கட்டையைக் கையில் பிடித்ததும், நிப்பிலிருந்து ஒரு குடம் மை காகிதத்தில் விழுந்தது. துரை நிப்பை இப்படியும் அப்படியும் திருப்பித் திருப்பிப் பார்த்தார். நிப்பு நன்ருகத் தேய்ந்து மொட்டையாகி இருந்தது. அதைப் பிடுங்கித் தூர எறிந்து விட்டுக் கன கோபத்துடன், "வேறு ஒரு நிப்புக் கொண்டு வாரும்!" என்ருர்.

கண் மூடிக் கண் திறக்கும் நேரத்துக்குள்ளாக ஸ்டேஷன் மாஸ்டர் ஒரு டப்பி நிறைய நிப்பைத் துரையின் எதிரே நீட்டிஞர். அதைப் பார்த்த துரை, "இத்தனை நிப்புகளா?" என்று வாயைப் பிளந்து வியந்தார்.

"கொஞ்சம் கொஞ்சமாகச் சேர்ந்து போய் விட்டன, ஸார்! நான் ஒரு நிப்பைக் குறைந்தது ஆறு மாதங்களாவது வைத்துக் கொள்ளுவேன்" என்று சொல்லி விட்டுத் துரை விசி எறிந்த நிப்பைப் போய் எடுத்து வந்து அதை ஒரு காகிதத்தில் அழகாக மடித்து வைத்துக் கொண்டார்.

துரை 'நோட்' எழுதி முடித்ததும், "ஸ்டேஷன் மாஸ்டர்!" என்று கூப்பிட்டார்.

"எஸ், ஸார்!"

"உம்மைப் பற்றி நமக்கு ஒரு காகிதம் வந்திருக்கிறது. நீர் பிரயாணிகளுடன் வீண்



ராமு:—எங்கள் அப்பாவுடன் உலக அதிசயப் பொருள்களில் ஒன்றான தாஜ்மகாலை நாங்கள் பார்க்கப் போகிறோம்.

சோமு:—எங்கள் அண்ணா கூடத் தான் தாஜ்மகால் பார்த்திருக்கிறான். அது அப்படி ஒன்றும் அதிசயமாக இல்லை என்று சொன்னான்.

ராமு:—அப்படியானால் உங்கள் அண்ணா ஒரு அதிசயப் பிறவிதான்! அவனைப் பார்த்தாலே போதும்!

சண்டை போடுகிறீர்களாமே!" என்று கேட்டார் துரை.

ஒரு நிமிஷ நேரம் ஒன்றும் வாய் திறவாமல் ஸ்டேஷன் மாஸ்டர் துரையையே பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு அவர் ஆற அமர யோசித்தவாறு பவ்யமான குரலில், "ஸார்! நம்முடைய இந்த லயனைப் பற்றி எல்லோரும் கேலி செய்கிறார்கள். 'சின்ன லயன், சின்ன லயன்!' என்று சொல்லிப் பரிகாசம் செய்கிறார்கள். எதற்காகச் சின்னது என்று சொல்லுகிறீர்கள் என்று நான் அவர்களைக் கேட்பது உண்டு. இதைத் தவிர நான் யாருடனும் வேறு எவ்விதமான சண்டையும் வைத்துக் கொள்வது இல்லையே!" என்றார்.

துரை வியப்புடன் சிறிது நேரம் ஸ்டேஷன் மாஸ்டரைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தார். "அது இருக்கட்டும்! இந்தப் பஸ் காரர்களுடன் உமக்கு என்ன தகராறு?" என்று கேட்டார்.

"தகராறு ஒன்றும் இல்லை, ஸார்! அவர்களுடன் எனக்குச் சிநேகிதம் தான். நான் அவர்களுடன் சீட்டாடுவது உண்டு; சதுரங்கம் ஆடுவது உண்டு. ஆனால் நம் வண்டிக்கு வரும் பிரயாணிகளை ஏமாற்றித் தங்கள் பஸ்ஸுக்கு அழைத்துப் போவார்களேயானால் மட்டும் சண்டை போடுவது உண்டு. இன்று கூட அந்தக் கிழவனை ஒரு பஸ்காரனிடமிருந்து தான் மீட்டுக் கொண்டு வந்து நம் ரயில் வண்டியில் ஏற்றினேன்" என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

"ஆமாம். நீர் அவர்களுடைய பஸ்களின் டயரைத் துவாரம் செய்து விடுகிறீராமே?"

ஸ்டேஷன் மாஸ்டர் தலை அசைத்து, "ஆமாம், ஸார்! நம் ஜம்புதான் டயரில் துவாரம் செய்தான். ஆனால் எஜமான்! அந்த நாளில் அந்தப் பஸ் காரர்கள் ரொம்பக் கஷ்டங்கள் கொடுத்து வந்தார்கள். நம் வண்டியில் ஒரு பிரயாணியைக் கூட உட்கார விடாமல் செய்தார்கள். எல்லாரையும் பஸ்ஸில் திணித்து அழைத்துக் கொண்டு போனார்கள். அதனால் தான் நான் அப்படி......" என்றார்.

"ஆனால் இதெல்லாம் சரியில்லை. நீர் இம் மாதிரி செய்யக் கூடாது. இது சட்ட விரோதம். புரிந்ததா!" என்றார் துரை.

"எஸ், ஸார்! இனிமேல் இந்தக் குற்றம் நேராத வண்ணம் பார்த்துக் கொள்ளுகிறேன், ஸார்! இந்தத் தடவை மட்டும்......" என்று குற்றவாளியைப் போன்று கனிந்த குரலில் கூறினார் ஸ்டேஷன் மாஸ்டர்.

துரை சிறிது நேரம் வரை உட்கார்ந்து சிகரெட்டுக் குடித்துக் கொண்டிருந்தார். பிறகு திடீரென்று, "ஆமாம், நீர் இந்த ஸ்டேஷனில் எத்தனை நாட்களாக இருக்கிறீர்?" என்று கேட்டார்.

"ஆரம்பத்திலிருந்தே, அதாவது இந்த ஸ்டேஷன் இங்கு திறக்கப்பட்ட பொழுதிலிருந்தே நான் இங்கே இருக்கிறேன், ஸார்! அந்த நாட்களில் ஸார், இங்கே பட்டப் பகலில் நரிகள் வட்டமிட்டன. இரவு வேளைகளில் ஓநாய்கள் தங்கள் தணல் நாக்கைத் தொங்க விட்டுக் கொண்டு சுற்றிக் கொண்டிருந்தன. ஒரே அவாந்தரமான காடு என்றால் காடுதான்!" என்றார் ஸ்டேஷன் மாஸ்டர்.

ஒரு சின்னஞ் சிறு 'உம்' கொட்டி விட்டுத் துரை சிறிது நேரம்வரை வாய் திறந்து ஒன்றும் பேசாமல் சிகரெட் குடிக்கலானார். பிறகு ஏதோ யோசித்தவாறே, "சரி, நான் இன்னொரு தடவை சீக்கிரமாகவே இந்தப் பக்கம் வருவதாயிருக்கிறேன். அப்பொழுது மீண்டும் உம்மைச் சந்திக்கிறேன்.—அது சரி, ஏன் ஸ்டேஷன் மாஸ்டர்! உமக்கு உமது கிராமத்தில் நிறைய நிலம்-நீச்சு இருப்பதாகக் கேள்விப்பட்டேனே! அது உண்மைதானா?" என்று கேட்டார்.

ஸ்டேஷன்மாஸ்டர் இரண்டு கைகளையும் கூப்பிக் கொண்டு, "ஸார், உங்கள் புண்ணியத்தில் ஒன்றுக்கும் குறைவில்லை. அரண்மனை போன்ற அழகான மச்சு வீடு அரை ஏக்கரா நிலத்திலே இருக்கிறது. மா, பலா, தென்னை முதலிய மரங்களும் ஏராளமாக இருக்கின்றன!" என்றார்.

துரைக்கு விடை கொடுத்து அனுப்பி விட்டு ஸ்டேஷன் மாஸ்டர் அறையைப் பூட்டிக் கொண்டு வீட்டுக்குப் புறப்பட்டார். கூப்பிடு தூரத்தில், அதாவது பத்தடியில் தான் அவர் வீடு இருந்தது. காலை எட்டிப் போட்டு வெகு சீக்கிரமாக வீட்டை அடைந்தார். வாசலில் நுழைந்ததும் நுழையாததுமாக, "ஏ சாந்தி! மாந்தி! சாந்தி! எல்லோரும் எங்கே போய்விட்டீர்கள்? இன்று பெரிய பண்ணையார் வீட்டில் சாப்பிடச் சொல்லியிருக்கிறார்கள். போக வேண்டும், தெரியும் அல்லவா?" என்று கேட்டார்.

ஸ்டேஷன் மாஸ்டரின் மனைவி சிறு வயதிலேயே இவ்வளவு பெண்களுக்கும் தாயாராகியிருந்தாள். ஆகவே அவள் உடம்பு ஒட்டித் துரும்பாகி யிருந்தது. அதுமட்டும் அல்ல; அடிக்கடி உடம்புக்கு ஏதாவது கோளாறு ஏற்பட்டு அவளைப் படுத்த படுக்கையாகவே போட்டு வந்தது. அன்றைக்கும் அவளுக்கு ஏதோ உடம்பு. போதாக்குறைக்குக் கடைசி மூன்று பெண்களும் வேறு படுத்துக் கொண்டிருந்தார்கள். ஒருத்திக்கு ஜுரம்; ஒருத்திக்கு வயிற்றளைச்சல்; இன்னொருத்திக்கு முதுகிலே கட்டி. ஸ்டேஷன் மாஸ்டர் மற்ற பெண்களைத் தாமே குளிப்பாட்டி, தலை துவட்டி, ஆடை அணிவித்து, தலைவாரிப் பின்னினர். பிறகு தம்மையும் புறப்படுவதற்குத் தயார் செய்து கொண்டு, "எல்லோரும் கையோடு ஒரு டம்ளர் எடுத்து வாருங்கள். அங்கே கிடைக்கும் பட்சணம் பாயசத்தை எல்லாம் வீட்டுக்கு எடுத்து வந்து சாயங்கிரம் சாப்பிடலாம்" என்றார்.

ஸ்டேஷன் மாஸ்டரின் கறுப்புச் சைன்யம் வரிசையாக அணி வகுத்துக் கொண்டு விருந்துக்குப் புறப்பட்டது.

ஸ்டேஷன் மாஸ்டர் இந்த ஊருக்கு வந்து எத்தனையோ காலமாகி விட்டது. ஆகவே, அவரும் அந்தக் கிராமத்தில் ஒருவராகவே கருதப்பட்டு வந்தார். ஊரில் ஏதாவது விசேஷம் என்றால் அவருக்கும் அழைப்பு வராமல் இராது. அழைப்பு வரவேண்டியதுதான் தாமதம்; ஸ்டேஷன் மாஸ்டர் தம் கரும் படையைத் திரட்டிக் கொண்டு கட்டாயம் விஜயம் செய்து விடுவார். அதோடு மட்டும் அல்ல; கூடத்தில் நல்ல நுனி இலையாகப் பார்த்துத் தம் கரும் படையை வரிசையாக, வசதியாக உட்கார வைக்கவும் தவறுவதில்லை. ஸ்டேஷன் மாஸ்டர் பிறர் வீட்டு விருந்துக்கு மட்டும்தான் போகிறார் என்பதில்லை. தம் வீட்டில் பிறருக்கும் அவர் விருந்து வைப்பது உண்டு. வருஷத்துக்குக் குறைந்தது இரண்டு தடவையாவது கிராமத்தார்களுக்குக் கன சம்பிரமமான விருந்து வைத்தே தீருவது அவருடைய பழக்கம்.

எப்பொழுதாவது உத்தியோகத்தைப் பற்றிய பேச்சு எழுந்தால் அதைத் திட்டுவார். "இங்கே காட்டில் அல்லவா மாட்டிக் கொண்டு விழிக்கிறேன்!" என்று சொல்லி ஆதங்கப்படுவார்.

மாம்பழக் காலத்தில் மற்றவர்களுடன் சேர்ந்து மாம்பழத்தைத் தின்று கொண்டே, "இதுவும் ஒரு மாம்பழமா? அப்பப்பா! என்ன புளிப்பு! என்ன புளிப்பு! எங்கள் தோட்டத்து மாம்பழத்தைத் தின்று பார்த்தால்தான் மாம்பழம் என்று எதைச் சொல்லுகிறார்கள் என்பதைத் தெரிந்து கொள்ள முடியும்? எங்கள் தோட்டத்துப் பழம் எத்தனை பெரிசாயிருக்கும், தெரியுமா? ஆனால் என்ன செய்வது? இந்த உத்தியோகத்தைக் கட்டிக் கொண்டு மாரடிக்க வேண்டும் என்று என் தலையில் எழுதியிருக்கிறதே! இந்த உத்தியோக ஆசை இருக்கிறதே, இது பிடித்தால் இலேசில் விடுவதில்லை. 'உமக்கு என்ன ஐயா, வேலைக்குக் கவலை?' என்று நீங்கள் கேட்கலாம். நான் என்ன ஸார் செய்யட்டும்? இந்த ரெயில் ஊதலையும் சத்தத்தையும் கேட்காவிட்டால் எனக்கு இராத்தூக்கமே பிடிப்பதில்லை" என்பார்.

அன்று பெரிய பண்ணையார் வீட்டுக் கூடத்தில் ஸ்டேஷன் மாஸ்டர் வரிசையாகத் தம் பெண்களுடன் உட்கார்ந்திருந்தார். பரிசாரகன் அன்னம் பரிமாறிக் கொண்டிருந்தான். மாந்தி பரிமாறுபவனைத் தடுத்து, "போதும், போதும்!" என்று சொன்னாள்.

ஸ்டேஷன் மாஸ்டர், "போட்டுக் கொள்ளடி, போட்டுக் கொள்! கூட்சூடா இருக்கிறது. இனிமேல்தான் சாப்பிடவே ஆரம்பிக்கப் போகிறாய். அதற்குள்ளாகவே, 'வேண்டாம், வேண்டாம்' என்கிறாயே, அசடு!" என்று சொல்லித் தம் கையாலேயே அன்னத்தை அழுத்திப் பிடித்து இலையில் ஒரு ஓரமாக வைத்து இன்னும் போடுவதற்கு வசதி செய்தார்.

அடுத்தபடி காலியாக இருக்கும் மூன்று இலைகளைப் பார்த்த பரிசாரகன், "இந்த இலைகள் யாருக்கு? இந்த இலைகளுக்கு உடையவர்கள் எங்கே போய் விட்டார்கள்?" என்று கேட்டான்.

ஸ்டேஷன் மாஸ்டர் அவசரம் அவசரமாக, "இந்த இலைகள்தானே? நம்முடையதுதான். நம் மற்ற மூன்று பெண்களும் இன்னும் வரவில்லை! அவர்களுக்காகத்தான் 'ரிஸர்வ்'



செய்து வைத்திருக்கிறேன்! அவற்றிலும் பரிமாறு" என்று சொன்னார்.

இதே சமயம் தற்செயலாக ஸ்டேஷன் மாஸ்டருக்கு அறிமுகமான மனிதர் ஒருவர் அங்கே வந்து, "ஸ்டேஷன் மாஸ்டர்! வந்து விட்டீர்களா? நமஸ்காரம்!" என்றார்.

"நமஸ்காரம்! நமஸ்காரம்!" — சாதம் பிசைந்து கொண்டிருந்த ஸ்டேஷன் மாஸ்டர் இரு கைகளையும் உயரத் தூக்கிக் கும்பிட்டுப் பல்லைக்காட்டிய வண்ணம், "என்ன, சௌக்கியமா? ஏதாவது விசேஷம் - கிசேஷம் உண்டா?" என்று குசலப் பிரச்னம் விசாரிக்கத் தொடங்கி விட்டார்.

"எல்லாம் தங்கள் ஆசீர்வாதமும், தயவும் தான்! உங்கள் சமாசாரம் எப்படி? இந்த ஸ்டேஷனைக் கம்பெனி மூடிவிடப் போகிறதாக யார் யாரோ பேசிக் கொண்டார்களே! என்ன அது உண்மைதானா? இல்லை, வெறும் வீண் வதந்தியா?"

"நமக்கு என்ன, ஸார்! இந்த ஸ்டேஷன் இருந்தால் என்ன, போனால் என்ன? போய் விட்டால் ரொம்ப ரொம்ப நல்லதாகப் போயிற்று! நான் எங்கள் ஊருக்குத் திரும்பிப் போய்விடுகிறேன்! இந்தத் தொல்லை பிடித்த வேலையிலிருந்து தப்பினால் போதும். அப்பப்பா! பிராணன் அல்லவா போகிறது! வேலை போய் விட்டால் ஊருக்குப் போய் ஓய்வாக, சுகமாக 'அக்கடா' என்று இருக்கலாம் அல்லவா? அரண்மனை அத்தனை பெரிய வீடு இருக்கும்பொழுது எனக்கு என்ன சார், கவலை? மாந்தோப்பு இருக்கிறது; தென்னந் தோப்பு இருக்...

"கம்பெனி! கம்பெனி! கம்பெனி! எப்பொழுது பார்த்தாலும் கம்பெனி ஸ்மரணை தானா? இந்தக் கம்பெனி இவருக்கு என்னத்தை அள்ளிக் கொட்டிக் கொடுத்து விட்டதோ, தெரியவில்லை! 'கம்பெனி, கம்பெனி!' என்று கம்பெனி ஸ்மரணை செய்தே இவர் உயிரை விட்டு விடுவார் போலிருக்கிறதே!" என்று பின்னாலிருந்து யாரோ கூறினார்கள்.

அது ஸ்டேஷன் மாஸ்டரின் காதுகளில் விழுந்து விட்டது. அவருக்கு ஆத்திரம் பீறிக் கொண்டு வந்தது. "ஆமாம், கம்பெனிதான் எனக்கு உயிர், உடல், பொருள், ஆவி எல்லாம். அதை மறந்தால் எனக்குச் சோறு கிடைக்குமா? ஒரு தடவை, இரண்டு தடவை அல்ல; ஆயிரம் தடவை அதன் பெயரைச் சொல்லுவேன். என்னைத் தடுக்க நீ யார்?" என்று ஆத்திரம் தீர உரக்கக் கத்தினார்.

"கோபித்துக் கொள்கிறீர்களே! ஏதோ தெரியாமல் சொல்லிவிட்டார். அது போகட்டும், சும்மா விடுங்கள், சார்!" என்று அந்த மனிதர் இலேசாகச் சிரித்தவாறு ஸ்டேஷன் மாஸ்டரைச் சமாதானப் படுத்த முயன்றார்.

"உண்மையைச் சொல்லுகிறேன், ஸார்! கம்பெனி மட்டும் என் மீது கருணை காட்டாமல் இருந்திருக்குமானால் என் குழந்தைகள் அத்தனையும் பசியினால் வாடி மடிந்து செத்தே போயிருக்கும்!"

"ஏன்? பசியினால் செத்துப் போவானேன்? கிராமத்தில் தான் கோட்டை போன்ற கட்டிடம் இருக்கிறது. மா, தென்னை, பலா முதலிய மரங்கள் ஏராளமாக இருக்கின்றன.

ஸ்டேஷன் மாஸ்டரும் அவர்களுடன் கூடவே எழுந்தார். கையலம்பிவிட்டு வந்து பாயஸ டம்ளர்களைப் பெண்களின் கையில் கொடுத்தார். பிறகு வராத தம் பெண்களுக்காக 'ரிஸர்வ்' செய்திருந்த மூன்று இலைகளையும் தம் மேல் துண்டை விரித்துப் போட்டு எடுத்துக் கன கச்சிதமாக மூட்டை கட்டிக் கொண்டார். மூட்டையைக் கையில் எடுத்துக் கொண்டு பெண்களையும் அழைத்துக்கொண்டு, மெதுவாக யானையைப் போல ஆடி அசைந்தபடி ஸ்டேஷனை நோக்கிப் புறப்பட்டார்.

ஸ்டேஷனுக்கு அருகில் தேநீர்க் கடைக்குப் பக்கமாகப் பஸ் நின்று கொண்டிருந்தது. அதைப் பார்த்த ஸ்டேஷன் மாஸ்டர் தொலைவிலிருந்தே, "முத்து! சதுரங்கக் காய்களை எடுத்து வை. இதோ நான் வந்துவிட்டேன்!" என்று கத்தினார்.

தினமும் மாலை வேளையில் தேநீர்க் கடை வாசலில் சதுரங்க ஆட்டம் நடப்பது வழக்கம். ஸ்டேஷன் மாஸ்டர் அந்தப் பஸ் காரர்களுடன் சேர்ந்தே விளையாடுவது வழக்கம். ஆட்டத்தின் பொழுது அவர்களுக்குள் சண்டை சச்சரவு எதுவும் நடப்பதில்லை. இடையிடையே சிரிப்பும் பேச்சும் கேலியும் கூத்துமாக ஏக அமர்க்களப்படும். அந்தச் சூழ்நிலையே கல கலவென்றிருக்கும்.

அன்று சதுரங்கம் விளையாடும் பொழுது டிரைவர் முத்து கேலியாக, "ஏன் ஸ்டேஷன் மாஸ்டர் ஐயா! பிரயாணிகளுக்காக நீங்கள் எங்களிடம் எதற்காகச் சண்டை போடுகிறீர்கள்? பிரயாணிகள் குறைந்து வருகிறார்கள் என்பதற்காகக் கம்பெனிக் காரர்கள் உங்கள் சம்பளத்தில் ஏதாவது பிடித்து விடுகிறார்களா, என்ன?" என்று பேச்சுவாக்கில் கேட்டு வைத்தான்.

ஸ்டேஷன் மாஸ்டர், "அப்படிச் சொல்லாதே! கம்பெனிதானே எனக்குச் சோறு போடுகிறது! உண்ட வீட்டுக்கு இரண்டு நினைக்கலாமா? கம்பெனிக்கு நஷ்டம் ஏற்படும் வகையில் நான் நடந்து கொள்ளவே மாட்டேன். நான் அப்படி ஒன்றும் நன்றி கெட்டவன் இல்லை......" என்றார்.

ஆட்டத்தில் தனக்கு வெற்றி கிடைத்து விடும் என்று எண்ணினான் முத்து. ஆகவே, ஒரு காயைத் தூக்கிக் கட்டத்தில் வைத்துப் பேச்சை மாற்றிய வண்ணம், "இதோ பார்த்தீர்களா, கட்டி விட்டேன்! பிரயாணிகள் எக்கேடு கெட்டுப் போனால் நமக்கு என்ன? ஆட்டத்தைக் கவனியுங்கள்!" என்றான்.

ஸ்டேஷன் மாஸ்டர் அவனுடைய ஆட்டத்தைக் கவனித்துவிட்டுச் சிரித்தவாறே, "தோற்றுப் போய் விட்டேன், அப்பா! தோற்றுப் போய்விட்டேன்!" என்றார். பிறகு வயிறு புடைக்க விருந்துச் சாப்பாடு சாப்பிட்டு விட்டு வந்த களைப்பில் அங்கேயே தம் கட்டையை நீட்டி விட்டார். பிறகு தம் வயிற்றைக் கைகளால் தடவி விட்டுக் கொண்டே, "வயிற்றை என்னவோ 'கடபுட' வென்கிறதே!" என்றார்.

அதற்குப் பின் பதினைந்து நாட்கள் ஓடி விட்டன. ஒரு நாள் துரையின் தனி 'ஸலூன்' ஸ்டேஷனில் வந்து நின்றது. துரை இறங்கியதும் ஸ்டேஷன் மாஸ்டர் அவருக்கு ஒரு பெரிய சலாமாக அடித்தார். அன்று அவர் வெற்று உடலுடன் இல்லை. கைச்சட்டை கால் சட்டை, தொப்பி முதலியவை யெல்லாம் 'மிக்'காக அணிந்து கொண்டு தயாராக இருந்தார். துரை வரப்போகும் செய்தி அவருக்கு முன்னதாகவே கிடைத்திருந்தது.

துரை அறையில் வந்து நாற்காலியில் உட்கார்ந்தவர் சிகரெட்டை எடுத்துப் பற்ற வைத்துக் கொண்டு விதம் விதமாகப் புகை விட்டுக்கொண்டிருந்தார். ஸ்டேஷன் மாஸ்டர் அவருக்கு எதிரே கையைக் கட்டிக்கொண்டு நின்றார். இம்மாதிரி எவ்வளவு நேரம் போயிற்றோ, தெரியாது.

கடைசியில் துரை சிகரெட்டை ஒரு 'தம்' இழுத்து விட்டுத் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, "ஸ்டேஷன் மாஸ்டர்!" என்றார்.

"எஸ், ஸார்!"

"உங்களிடம் ஒரு சமாசாரம்......சொல்ல வருத்தமாகத்தா னிருக்கிறது. இருந்தாலும் எப்படியும் அதைச் சொல்லித்தானே ஆக வேண்டும்?" என்று பூர்வ பீடிகையுடன் ஆரம்பித்தார் துரை.

ஸ்டேஷன் மாஸ்டர் மூச்சுக்கூட விட மறந்தவாறு துரையின் முகத்தையே பார்த்தவாறு நின்று கொண்டிருந்தார்.

"இந்த ஸ்டேஷனையும், இது போன்ற இன்னும் எத்தனையோ ஸ்டேஷன்களையும் வைத்துக் கொண்டு கம்பெனி நாளுக்கு நாள் நஷ்டப்பட்டுக் கொண்டிருக்கிறது என்ற விஷயம் உங்களுக்குத் தெரியாததல்ல. ஆகவே, இது போன்ற எல்லா ஸ்டேஷன்களையும் மூடி விடுவது என்று கம்பெனி முடிவு செய்திருக்கிறது. ஆனால் இவற்றுக்குப் பதிலாக இவை 'வண்டி நிற்கும் இடங்களா'க மாறிவிடும். இந்த ஸ்டேஷனில் ஸிக்னல் (கை காட்டி மரம்) முதலியவை இருக்காது. ஸ்டேஷன் 'ஸ்டாப்'களும் இருக்க மாட்டார்கள். ஆனால் இறங்குபவர்கள் ஏறுபவர்களுக்காக வண்டி மட்டும் நிற்கும். டிக்கட் பரிசோதகர்களே பிரயாணிகளுக்கு டிக்கட் கொடுப்பார்கள். அவர்களே இறங்கும் பிரயாணிகளிடமிருந்து டிக்கெட்டையும் வாங்கிக் கொள்வார்கள்."

"ஸார்! நான்... என்னை..." என்று ஆரம்பித்த ஸ்டேஷன் மாஸ்டர் என்ன சொல்வது என்று ஒன்றும் புரியாமல் விழித்தார்.

துரை மிகவும் சாந்தமான குரலில், "இந்த ஸ்டேஷனில் உள்ள ஊழியர்கள் அனைவரையும் குறைத்து விடுவது என்று கம்பெனி தீர்மானித்திருக்கிறது!" என்றார்.

ஸ்டேஷன் மாஸ்டர் அகல விரிந்த கண்களுடன் அதிகாரியையே பார்த்தவாறு நின்றார்.

அதிகாரி மறுபடியும் அமைதியான குரலில், "ஆமாம், நீர்தான் உமக்குக் காடு, கழனி,

வீடு வாசல், வயல் - என்ன வெல்லாமோ இருப்பதாகச் சொன்னீர்களே! உம்முடைய பிராவிடண்டு பண்டு, போனஸ் முதலியவற்றை வாங்கிக் கொண்டு ஊருக்குப்போய்ச் சுகமாக இருமே! வரும் பணத்தை வைத்துக் கொண்டு சாகுபடி ஆரம்பிக்கலாம். இல்லா விட்டால் ஏதாவது வியாபாரம் தொடங்கினால் பொழுதும் சுகமாகப் போகும். வரும்படிக்கு வரும்படியும் ஆகுமே!'' என்றார்.

ஸ்டேஷன் மாஸ்டர் சிறிது நேரம் பேசாமல் இருந்தார். பிறகு கையைக் கூப்பிக் கொண்டு அழாத தோஷமாக, "ஸார்! அதெல்லாம் பொய், ஸார்!'' என்றார்.

துரை ஆச்சரியத்துடன், "எதெல்லாம் பொய்?'' என்று கேட்டார்.

''எனக்கு வீடு வாசல், சொத்துச் சுதந்திரம் ஒன்றுமே கிடையாது. ஏதோ என்ன வெல்லாமோ இருப்பதாக வெறுமனே சொல்லி வைத்தேன், அவ்வளவுதான்!''

"நீர் என்ன சொல்கிறீர்? அன்று நான் உம்மைத் தெளிவாகக் கேட்டேன் அல்லவா? உமக்கு வேலை போய் விட்டாலும் சொத்துச் சுதந்திரம் இருப்பதனால் கவலை இல்லை என்றல்லவா உம்மை ஆள் குறைப்பு ஜாபிதாவில் சேர்த்து வைத்தேன்!'' என்றார் துரை.

ஸ்டேஷன் மாஸ்டரின் கண்களிலிருந்து நீர் 'பொல பொல' வென்று கீழே விழுந்தது.

அதைப் பார்த்த துரை சோகமான குரலில், "இனிமேல் என்னால் என்ன செய்ய முடியும்?'' என்றார். பிறகு சிறிது நேரம் ஏதோ யோசித்து விட்டு, "சரி, அப்படியானால் ஒரு காரியம் செய்யும். ஏதாவது ஒரு வியாபாரம் ஆரம்பியும். நான் பிராவிடண்டு பண்டு, போனஸ் இவற்றைத் தவிர இன்னும் ஒரு ஐந்நூறு ரூபாய் தருமாறு சிபாரிசு செய்கிறேன். என்ன, உமக்குச் சம்மதந்தானே? உமக்கு என்ன தொழில் செய்தால் நலம் என்று தோன்றுகிறது?'' என்று கேட்டார்.

சிறிது நேரம் ஏதோ யோசனை செய்து விட்டு ஸ்டேஷன் மாஸ்டர் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஸார்! இங்கே கரி டிப்போ ஒன்றுகூட இல்லை. அதனால்...'' என்றார்.

"ஆல் ரைட்! நீர் இங்கே ஒரு கரி டிப்போ ஆரம்பித்து விடும். ரெயில்வே காம்பவுண்டுக் குள்ளேயே வாடகை கொடுக்காமல் உமக்கு இடம் தரவும் ஏற்பாடு செய்கிறேன்!'' என்றார் துரை.

"ஸார்! இந்தக் குவார்ட்டர்?''

"ஓ! இதிலும் நீர் இருக்கலாம். இது காலியாகத்தானே கிடக்கப் போகிறது!''

ஸ்டேஷன் மாஸ்டர் மறுபடியும் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "ஸார்! பிரயாணிகள் டிக்கட் பரிசோதகரிடமே டிக்கட் வாங்கிக் கொள்ளட்டும்; ஆனால் இறங்குபவர்களிடம், தாங்கள் தயவு செய்து உத்தரவு செய்தால் நானே டிக்கட்டை வாங்கி வைக்கிறேனே!'' என்றார்.

"அது எப்படி முடியும்? இந்த வேலைக்கென்று தனியாக ஒரு ஆசாமியை நியமிக்க முடியாதே!''

"ஸார், இதற்காக எனக்குச் சம்பளம் வேண்டாம்!''

துரை ஆச்சரியத்துடன் அவர் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தார்.

"ஸார்! கம்பெனி இவனை வேலையை விட்டு நீக்கி விட்டது என்று ஜனங்கள் சொல்லுவார்கள். அதற்காகத்தான்...'' இதைக் கூறும்பொழுது ஸ்டேஷன் மாஸ்டரின் கண்களில் நீர் துளித்து நின்றது.

துரை ஒரு நீண்ட மூச்சு விட்டு, "ஆனால் இது ஒரு 'பிரைவேட் அரேன்ஜ் மென்ட்' தான். புரிந்ததா?'' என்றார்.

ஸ்டேஷன் மாஸ்டரின் முகம் இதைக் கேட்டதும் மலர்ந்தது. அவர் கையைக் கூப்பிக் கொண்டு, "ஸார்! கொஞ்சம் காப்பி சாப்பிடுங்கள். என் மனைவி போடும் காப்பி 'ஏ ஒன்'னாக இருக்கும். சாப்பிட்டுப் பாருங்கள்! அப்புறம் சொல்லுவீர்கள்!'' என்று சொல்லி ஒரு டம்ளர் காப்பியை துரைக்கெதிரே மேஜையின்மீது வைத்தார்.

ஸ்டேஷன் மாஸ்டர் இப்பொழுது கரி வியாபாரம் செய்கிறார். வேலையைப் பற்றிக் கேட்டால், "வேலையாம், வேலை! வேலை என்ன வேண்டிக் கிடக்கிறது? வேலையும் ஆயிற்று; கூலியும் ஆயிற்று! எனக்கு வேண்டவே வேண்டாம். இப்பொழுது கூட என்னைக் கேட்டார்கள், பஞ்சாபிலே ஒரு புது லயன் திறந்திருக்கிறோம். அங்கே போகிறாயா என்று? பஞ்சாப் போவதற்கு எனக்கு என்ன பைத்தியமா பிடித்திருக்கிறது! இந்தக் கரி வியாபாரம் அதை விட எவ்வளவோ மேலாயிற்றே! பிறரிடம் கை கட்டிச் சேவகம் செய்யாமல், சுதந்திரமாக இருக்கிறதை விட்டு விட்டு யாராவது அடிமை யாவாரோ?'' என்கிறார்.

ஆனால் ரயில் வந்து விட்டால் அதே பழைய பிளாட் பாரத்துக்கு ஓடிப்போய்த் தலையை அசைத்து அசைத்து, ஒவ்வொரு பிரயாணியிடமும், "டிக்கட், டிக்கட்! டிக்கட்டைக் கொடுத்து விட்டுப் போங்கள், ஸார்!'' என்கிறார்.

யாராவது முன்பின் அறிமுகமானவர்களைச் சந்திக்க நேர்ந்தால், சிரித்துக் கொண்டே, "என் இந்த அதிர்ஷ்டத்தைப் பார்த்தீர்களா? வேலையை விட்டு விட்டாலும் நீ தான் இந்த ஸ்டேஷனைப் பார்த்துக் கொள்ள வேண்டும் என்று கம்பெனிக்காரர்கள் என் தலையில் இந்த வேலையைக் கட்டிவிட்டார்கள்!'' என்கிறார். யாராவது பிரயாணி தூரத்தில் தண்டவாளத்தைத் தாண்டிப் போவதைப் பார்த்து விட்டால், "ஸார்! அந்தப் பக்கமாக எங்கே போகிறீர்கள்? இப்படி டிக்கெட்டைக் கொடுத்து விட்டுப் போங்கள், ஸார்!'' என்று கூறுகிறார்.

**[ஸ்ரீ தாராசங்கர் பானர்ஜியின் வங்காளிக்கதை.]**

# விவேகமுள்ள தாய் அறிவாள் குழந்தைகளுக்கு இயற்கை உணவே சிறந்தது என்று!



இயற்கை உணவுதான் குழந்தையின் வளர்ச்சிக்கு அஸ்திவாரம்; எனவே தாய்ப்பால் புஷ்டியுடன் போதிய அளவில் பெருக ஓவல்டின் ஜீவசத்துக்களை அளிக்கிறது அதன் சிறந்த குணங்கள் சிசுவை போஷிக்கும். தாய்க்கு பலமும் சக்தியும் அளிப்பதுடன் சிசுக்கும் இன்றியமையாதது. அதில் போஷாக்கு அளிக்கும் சுத்தமான பசுவின் எட்டுப்பால், பழுத்த பார்லி மால்ட், கொக்கோ இயற்கை பாஸ் படைட்கள் பி & டி விடாமின்கள் சேர்த்துள்ளன. ஓவல்டினில் இருக்கும் போஷணை மற்றும் விடாமின் சத்துக்கள் இன்றியமையாதவை. ஓவல்டினைப் போலச் சிறந்தது எதுவும் கிடையாது.

டாக்டர்களும் நர்ஸ்களும் அதை சிபாரிசு செய்கின்றனர். போலிகளைத் தள்ளிவிடுங்கள்

விநியோகஸ்தர்கள் : ஜெஹாம்ஸ் டிரேடிங் கம்பெனி (இந்தியா) லிட்.

## ஓ வ ல் டி ன்

பாலூட்டும் தாய்மார்களுக்கு




OV. 323




## கோமதி சுப்ரமணியம்

“ஊசி... ஊசி... ஊசியோய் ... அம்மணி ஊசி!”–தெருமுனையில் கேட்கத் தொடங்கிய குறத்தியின் குரல் நேரம் செல்லச் செல்ல நெருங்கி வந்து கொண்டிருந்தது. பச்சைமலை பவளமலைப் பாட்டுப் பாடிக்கொண்டு கும்பலாக வரும் அவர்கள் கோஷ்டியைக் கண்டு விட்டாலே அத் தெருவிலுள்ள பெண்களுக்கு உற்சாகம் உண்டாகிவிடும்.

வெள்ளையும் சிவப்புமாக வர்ணப் பாசிகளை வாரிச் சொரிந்து கொண்டிருக்கும் அழகைக் காணவோ அல்லது இரும்பு வளையம்போல் வெள்ளிக் காப்புகளை அவர்கள் ஆபரணமாக மாட்டிக்கொண் டிருப்பதைக் கண்டு ரஸிப்பதற்காகவோ அல்ல.

மலை நாடுகளிலிருந்து அவர்கள் கொண்டு வரும் மருந்து மூலிகைச் சாமான்களை வாங்குவதிலும் பெயர் தெரியாத பொருள்களை வேடிக்கை பார்ப்பதிலுமே ஆர்வம் மிகுந்தவர்களாக அவர்களைச் சூழ்ந்து கொண்டு வேடிக்கை பார்ப்பார்கள்.

“கோரோசனை, கஸ்தூரி, நரிக் கொம்பு, பாசி, பவளம் வாங்கலியோ அம்மணி?” என்று அவர்கள் கொச்சைத் தமிழில் வியாபாரம் செய்யும் அழகே விசித்திரமானதுதான்.

குறத்தியை அழைத்துவிட்டு எதுவுமே வாங்காமல் திருப்பி அனுப்பிவிட்டால் அப்பொழுது அவளுக்கு வருகிற கோபத்தை பார்க்கவேண்டுமே! நமக்குப் புரியாத பாஷையில் ஏதேதோ திட்டிக் கொண்டு மொல்லு மொல்லென்று சண்டைக்கு வந்துவிடுவாள்.

இந்த வம்புக்காகவே குறத்தி நிற்குமிடத்தில் கூட நெருங்கி நிற்கப் பயந்தவளாய் தூரத்தில் ஒதுங்கி நின்றபடியே வேடிக்கை பார்ப்பது சாரதாவின் வழக்கம்.

அன்றைக்கு அவளுடைய வீட்டையே தேடி வந்துவிட்டாள் குறத்தி.

“கோரோசனை கஸ்தூரி அம்மணி!” —கட்டைத் தொண்டையில் அவள் அழைத்த குரல் சாரதாவை வாசலுக்கு இழுத்தது.

“கஸ்தூரிக்கும் கோரோசனைக்கும் இப்பொழுது செலவில்லை” என்று கூறிக் குறும்பாகச் சிரித்தாள் சாரதா.

“அது வேணாட்டிப் போவுது. வேறே ஊசி பாசி ஏதுனாச்சியும் வாங்கிக்கோ, அம்மணி! பசி வயித்தைச் சுத்துது. கிறுகிறுன்னு வருது. அம்மணி. ஒரு வாய் சோறு போடு. உனக்கு வேண்டிய பாசி......”

“எனக்குப் பாசியும் வேண்டாம், பவளமும் வேண்டாம்” என்று சொல்லி உள்ளே போனவள் கையில் பிடிசாதமும் கொஞ்சம் வெஞ்சனமும் கொண்டு வந்து குறத்தியிடம் நீட்டினாள்.

நன்றியோடு கையை நீட்டி வாங்கிய குறத்தி இரண்டு கவளமாக வாயில் போட்டுக் கொண்டு திண்ணையின்மீது உட்கார்ந்தாள்.

“நீ கேட்ட சோறுதான் போட்டாய் விட்டதே! போ, இன்னும் ஏன் உட்காருகிறாய்? அவர் வரும் நேரமாகி விட்டது. எழுந்திருந்து போ!” என்று வழியனுப்பினாள் சாரதா.

“அம்மணி கிட்டே சோறு வாங்கி தின்னுப் பிட்டு பதில் கொடுக்காமல் போக நானென்ன நன்றிகெட்ட ஜாதியா?” என்று பெருமையுடன் கூறியவள் தன் தோளில் தொங்கிய பைக்குள் கையை விட்டுத் தன் பொக்கிஷங்களைத் துழாவி எடுத்தாள்.

சிறிய சிப்பிக்கூடு போலிருந்த டப்பி ஒன்றை எடுத்து அதிலிருந்து ஒரு வஸ்துவை எடுத்தாள். சுற்றிலுமொரு முறை நோக்கி விட்டுப் பெரிய ரகசியம் தெரிவிக்கிறவள் போல் சாரதாவை நெருங்கினாள்.

“இதோ பார் அம்மணி, இது ஒரு வசியக் கொம்பு. இந்தக் கொம்பு யார் கைவசமிருக்கிறதோ, அவள் புருஷன் அவள் சொல் கேட்டு அவள் கைக்குள் அடங்கி இருப்பான். என்ன அம்மணி சிரிக்கிறே? நான் சொல்வதில் உனக்கு நம்பிக்கை யில்லையா? வேண்டுமானால் நீயே பாரேன். அடுத்த தடவை நான் வரும்போது சொல்லுவாய், அதன் பெருமையை!” என்று பேச்சோடு பேச்சாகச் சிறிதாக இருந்த ஏதோ ஒரு கொம்பை அவள் கைக்குள் திணித்தாள்.

“மஞ்சள் துணி ஒன்றை எடுத்து அதில் இந்தக் கொம்பு, நல்ல பவளம் ஒன்று, வெள்ளிக் காசு இம்மூன்றும் சேர்த்து முடிந்து உன் புருஷன் கண்ணில் படாமல் வைத்திரு. அப்பொழுது பாரேன், உன் புருஷன் உன்னிடம் அன்பாயிருப்பதை!” என்றாள்.

“நீ சொல்வது சரி. ஆனால் என்னிடம் பவளமில்லையே!”

“இதோ என்னிடம் இருக்கிறது. விலை அதிகமில்லை. ஒரே ஒரு ரூபாய்தான். கொம்புக்கு அம்மணி கிட்டே நான் காசு வாங்கப்

போகிறதில்லை. செல்லக் கையாலே சோறு போட்டதை அதுக்குள்ளே மறந்துடுவேனா? பவனத்துக்கு மட்டும்......''

சாரதா எதுவுமே பதில் பேசாமல் உள்ளே சென்று முழு ரூபாயைத் தூக்கி அவளிடம் கொடுத்ததும் குறத்தி புறப்பட்டு விட்டாள். இனியும் நிற்கப் பைத்தியமா என்ன?

★

சாரதாவின் குடும்பம் சண்டைக்கார குடும்பம் இல்லை என்றாலும் அத்தனை அந்நியோந்நியம் நிறைந்ததென்று சொல்ல முடியாது. வாங்கும் சம்பளத்தில் தன் செலவுக்கென்று பத்து இருபதை எடுத்துக் கொண்டு மிகுதியை அப்படியே மனைவியின் கையில் கொடுத்து விட்டு, அதோடு தன் கடமை முடிந்து விட்டதாக நினைத்து விடுவான் ராமாமிர்தம். ஒவ்வொரு குடும்பத்தைப்போல மனைவிக்கென அவனாகப் புடைவை துணி மணிகள் வாங்கி வருவதோ, டேப்பு ரிப்பன் புஷ்பம் வாங்கி வருவதோ கிடையாது.

சில சமயம் அவனது ஆபீஸ் நண்பர்கள் தமது வீடுகளுக்கு இது மாதிரியான சாமான்கள் வாங்கிச் செல்லும்போது ராமாமிர்தமும் கூடவே வந்திருக்கிறான்.

''ஏன் ராமாமிர்தம், நீயும் வீட்டுக்குத் தானே போகிறாய்? கொஞ்சம் புஷ்பம் வாங்கிக்கொண்டு போயேன்......மல்லிகை நல்ல மணம் நிறைந்ததாக இருக்கிறதே!'' என்பார்கள் நண்பர்கள்.

''அதெல்லாம் ஹோம் டிபார்டுமெண்ட். நான் அந்த விவகாரத்திற்கே போவதில்லை. வாடிக்கைப் பூக்காரன் இருக்கும்போது நமக்கு எதற்கு இந்தத் தொல்லையெல்லாம்?'' என்று அலட்சியமாகப் பதில் சொல்லுவான்.

வாடிக்கைக்காரனிடம் இரண்டணாவுக்கல்ல; நாலணாவுக்கே வாங்கி வைத்துக்கொண்டாலும் ராமாமிர்தம் ஆசையோடு வாங்கிக் கொடுக்கும் அரை முழம் மல்லிகைக்கு ஈடாக முடியுமா? இதுதான் சாரதாவின் வாழ்க்கையில் பெருங் குறை.

மற்றபடி அவனிடம் கொடுத்த பணத்தைப்பற்றியோ வீட்டின் செலவைப் பற்றியோ எதுவுமே கேட்கமாட்டான். அவளாக இந்த மாதம் மீதிப் பணம் இத்தனை என்று சொன்னாலும் கூடச் சரியாகக் காதில் வாங்கிக்கொள்ள மாட்டான்.

துணி மணி விஷயத்திலோ அவளுக்கு வேண்டியதை அவன் கொடுக்கும் பணத்தில் பக்கத்து வீட்டுப் பெண்கள் மூலமாகவோ அல்லது அவளாகவோ போய் எடுத்துக் கொள்ள வேண்டியதுதான். அவனைத் தன்னுடன் வரச்சொல்லி விரும்பி விரும்பி அழைத்தாலும் வரமாட்டான். ''உனக்கு வேண்டியதை நீயாக எடுத்துக் கொள்ள வேண்டியதுதானே? இதற்கு நான் எதற்கு? அதெல்லாம் எனக்கு ஒன்றும் தெரியவும் தெரியாது; ஒழிவும் இடையாது'' என்று சொல்லிவிட்டு நின்ற இடத்தில் நிற்காமல் தன் போக்கில் போய்விடுவான்.

கடைக்கு வரும் மற்ற தம்பதிகளைப் போல் கணவனும் தன்னுடன் வந்து தனக்கு வேண்டியதை எடுத்துக் கொடுப்பதில்லை என்ற குறையைத் தவிர அவள் எது எடுத்து வந்தாலும் அவன் அதைப் பற்றி ஒன்றுமே குறைகூற முன் வர மாட்டான். அதிகமாக பணச் செலவில் எடுத்து வந்துவிட்டால் அதற்காகக் கோபித்துக் கொள்ளுவதும் இல்லை. இப்படிக்கூட இருப்பாரா என்று ஒரொரு சமயம் அவள் அதிசயித்ததுண்டு.

தான் எடுத்து வந்த புடவையைக் கணவனிடம் காண்பித்து அவள், ''நன்றாயிருக்கிறதா?'' என்று கேட்டால், அவள் மனம் குளிரும்படியாக அவன் ஒரு வார்த்தை சொல்ல வேண்டுமே? அதுவும் கிடையாது. 'உன் செலக்ஷன் நன்றாயில்லை' என்று சொன்னால்கூட அவள் உச்சி குளிர்ந்து விடும். கணவன் இத்தனையாவது தன் விஷயத்தில் அக்கறை காண்பித்தாரே என்கிற இன்பம் இருக்கும்.

''புடவை எடுத்து வந்திருக்கிறாயா? சரி உன் மனதிற்குப் பிடித்தால் சரிதான்! நான் எதற்காகப் பார்க்க வேண்டும்? எனக்கென்ன தெரியப்போகிறது?'' என்று அவன் எடுத்து வந்ததை பார்க்கக்கூட பிரியப்படாததைப் போல் அவன் பேசும்போது அவள் உள்ளமே ஒடிந்துவிடும்.

இப்படியேதான் ஒவ்வொரு சிறு சிறு விஷயத்திலும் அவன் நடந்து வந்தான். அவள் சமையலைப் பற்றியோ அவள் அழகு செய்து கொள்வதைப் பற்றியோ எதுவுமே பேசியதில்லை. நன்றாயில்லை என்றாவது சொல்ல மாட்டாரா என்று ஏங்குவாள். அவன் வரைக்கும் விசேஷமாகச் செய்திருந்தாலும் ஒன்றுதான்; மோசமாக செய்திருந்தாலும் ஒன்றுதான்! ஒன்றுமே வித்தியாசம் பாராட்டாதவனாய் தன் ஆபீஸ் ஒன்றே குறியாகப் போய்விடுவான். இந்த மூன்று வருஷத்தில்



சினிமா டிராமா என்று எந்த இடத்திற்கும் அழைத்துச் சென்றதேயில்லை. எங்கு வேண்டுமானாலும் பக்கத்து வீட்டுப் பெண்கள் கோஷ்டியோடு போக வேண்டியதுதான். வயதான கிழம் கட்டைகள்தான் அவளுக்குத் துணையாக வருவார்கள். அவளை யொத்தவர்களெல்லாம் தங்கள் தங்கள் கணவர்களோடு ஜோடியாய்ச் செல்வார்கள். உலகத்தில் இளம் தம்பதிகள் எப்படி எப்படியோ இருக்க இவர் மட்டும் இப்படி விசித்திரப் பிரகிருதியாக இருக்கிறாரே என்று எண்ணிச் சாரதா ஏங்குவாள். ஒரொரு சமயம் தன் குறையை ஜாடைமாடையாகக் கணவனுக்குத் தெரியும்படியாகவும் சொல்லிப் பார்ப்பாள். அவனா அதற்கெல்லாம் அசைந்து கொடுக்கிறவன்?

"எல்லாக் குடும்பத்தையும்போல் உன்னைக் கட்டு திட்டத்திற்குள் அடக்காமல் உனக்குப் பூரண சுதந்திரம் கொடுத்திருக்கிறேனே!" என்று பெருமையாகச் சொல்லிக்கொள்வான்.

"உங்கள் சுதந்திரம் யாருக்கு வேண்டும்?" என்று சாரதாவின் உதடுகள் கேட்கத் துடிக்கும். அவன் அங்கு நின்றாலல்லவா அவள் கேட்பதற்கு? அதற்குள் அவன்தான் ஆபீஸைப் பார்க்கப் புறப்பட்டிருப்பானே?

★

கையில் குறத்தி கொடுத்த கொம்பும் பவளமு மிருந்தன. மணியோ பன்னிரண்டு அடித்து விட்டது. கணவன் வரும் நேரமாகி விட்டது. இன்னும் சாப்பாடு ரெடி பண்ணாமல் அரை குறையிலிருந்தது. இந்நிலையில் கணவன் வந்தால்...பசி ஆத்திரம் சண்டையில் முடியும். கையிலிருப்பதைக் கண்ட இடத்தில் வைத்துக் கணவன் கண்ணில் பட்டு விடக்கூடாதே என்பதற்காக வேலையோடு வேலையாகப் பெட்டியைத் திறந்து டப்பாவுக்குள் டப்பாவாக பத்திரப் படுத்தினாள்.



நண்பர்:—புறா வியாபாரம் எப்படி நடக்கிறது?

மற்றவர்:—மிகவும் நன்றாக நடக்கிறது!

நண்பர்:—எப்படி?

மற்றவர்:—காலையில் புறாவை விற்கிறேன்; மாலையில் அவை திரும்ப என் வீட்டுமே திரும்பி வந்து விடுகின்றன. மறுநாள் மீண்டும் அவைகளைக் கொண்டு போய் விற்று விட்டு வருகிறேன்!

சொல்லி வைத்தாற்போல் அதே சமயம் அவனும், "என்ன இன்னும் சமையல் ஆகவில்லையா?" என்று கேட்டுக் கொண்டே வீட்டினுள் நுழைந்தான்.

"இல்லை...ஆகிவிட்டது" என்று கூறியவள் தன் ரகசியம் எங்கே வெளிப்பட்டு விடுகிறதோ என்கிற பீதியுடன் பட படப்பாகப் பெட்டியை மூடினாள்.

"அழகுதான், போ! சமையல் அரை குறையிலிருக்கிறது. வீடும் வாசலும் அப்படி அப்படியே பரப்பிக் கிடக்கிறது. நீயானால் பெட்டியைத் திறப்பதுவும் மூடுவதுமாக ...... ஏன் ஏதாவது ரகசியப் பணம் சேர்க்கிறாயோ?" அவன் கேள்வியில் கொஞ்சம் சூடு தொனித்தது.

அவளுக்குத் தெரியும், கணவனுக்குத் தெரியாமல் பணம் சேர்க்கும் பெண்களை நஞ்சாக வெறுப்பவன் ராமாமிர்தம் என்பது. இதை விவாகமான புதிதிலேயே கண்டிப்புடன் அவளுக்குத் தெரிவித்திருந்தான். "இதோ பார், சாரதா! உனக்குச் செலவுக்கு வேண்டிய பணத்தை என்னிடம் கேள். ஒன்றிற்கு இரண்டாகத் தரத் தயாராக இருக்கிறேன். ஆனால் தனியாகப் பணம் பதுக்கும் வழக்கத்தை மட்டும் வைத்துக் கொள்ளாதே! அது என் மனதிற்குப் பிடிக்காத விஷயம்" என்று கூறி யிருந்தான். அவனுக்கு எது பிடிக்காதோ, அதே கொள்கை யுடையவள் தான் அவளும். ஆகவே, அவன் விருப்பத்திற்கு விரோதமாக என்றுமே நடந்ததில்லை. இன்று அவள் நடந்துகொண்ட விதம் அவன் மனதில் சந்தேகத்தைக் கிளப்பிவிட்டது.

நடந்ததைச் சொல்லிக் கணவனது சந்தேகத்தை நிவர்த்தித்துவிடலாமா என்று துடித்தது அவளது மனம். குறத்தியின் கண்டிப்பு அப்படிச் செய்யாதே என்று தடுத்தது. ஒரு வகையாகத் தன்னைச் சமாளித்துக் கொண்டு பரபரப்பாக வேலையைக் கவனிக்கத் தொடங்கினாள்.

அவள் எவ்வளவோ சமாதானம் சொல்லியும் அவன் மனதில் விழுந்த சந்தேகம் விழுந்ததுதான். தீர ஆராயாமல் ஒன்றும் பேசக் கூடாதென்று ஒன்றுமே அறியாதவன்போல் வழக்கம்போலச் சாப்பாட்டை முடித்துக் கொண்டு புறப்பட்டான்.

இடையே ஒரு வாரமிருக்கும். பெட்டியைத் தனிமையில் சோதித்துப் பார்க்கச் சந்தர்ப்பம் கிடைக்காமலே கழிந்தது. அன்று ஞாயிற்றுக் கிழமை. 'மாடினி ஷோ'வுக்குப் பெண்கள் புறப்பட்டனர். சாரதாவும் கணவனிடம் சொல்லிக் கொண்டு புறப்பட்டாள்.

கிடைத்த சந்தர்ப்பத்தை நழுவவிட மனமில்லாதவனாக அன்று வெளியே செல்லும் அலுவல்களைக் குறைத்துக்கொண்டு சாரதாவின் பெட்டியைச் சோதனையிட முற்பட்டான். அது அவன் மனதிற்கு ஒவ்வாத விஷயம் தானென்றாலும், அவன் மனதில் முளைத்திருந்த சந்தேகம் அவனை அச்செயலில்



சென்னை இந்து தியாலாஜிகல் உயர்நிலைப் பள்ளியின் மாணவர்கள் ஆசிரியர்கள் அடங்கிய கோஷ்டி ஒன்று சென்ற மாதம் மைசூர் - பெங்களூர் முதலிய இடங்களில் சுற்றுப் பிரயாணம் செய்துவிட்டுத் திரும்பியது. மேற்படி கோஷ்டியினரை மைசூர் நகரசபைத்தலைவர் ஸ்ரீ நரசிம்ம ஐயங்கார், மைசூர் நகர மக்களின் சார்பில் வரவேற்றுப் பேசுவதையும் மாணவர்கள் அமைதியாக நின்று கேட்பதையும் படத்தில் காணலாம்.

இறக்கியது. பெட்டியிலிருந்த சாமான்களை ஒவ்வொன்றாக எடுத்துக் கீழே வைத்தான். குறிப்பாக அன்று அவள் வரும்போது அவள் தன் கையில் வைத்திருந்த டப்பாவைக் கண்டு பிடித்து எடுத்தும் விட்டான். அதைத் தொடும்போதே அவன் இருதயம் படபட வென்று அடித்துக் கொண்டது. அவள் மட்டும் தான் நினைத்ததைப் போலப் பணம் சேர்க்கும் முயற்சியில் இறங்கியிருந்தாளானால் கட்டாயம் அவனுடைய வெறுப்புக்குப் பாத்திரமாக வேண்டியவள்தான்.

ஒரு கணம் பார்க்காமலே வைத்துவிடுவோமா என்றுகூட நினைத்தான். சீ! இதென்ன கோழைத்தனம்? பார்த்தால் என்ன குடி முழுகியா போய்விடும்? அப்படித்தான் அவள் துரோகம் செய்கிறாள் என்பதாவது நிதர்சனமாகத் தெரியட்டுமே? அவனையறியாமலே அவன் கைகள் டப்பாவின் மூடியைத் திறந்து விட்டன. திறந்ததும் திறக்காததுமாக அவன் கண்டது என்ன? மஞ்சள் துணியில் முடிந்திருந்த வெள்ளி நாணயம் முடிச்சுக்கும் அப்பால் தலையை நீட்டிக் கொண்டிருந்தது. பவளமும் கொம்பும் அடிப்புறமாக இருந்ததால் அவை அவன் கண்களுக்குத் தப்பிவிட்டன. அவன் எந்தக் கண்கொண்டு நோக்கினானோ, அது அவன் கண்களுக்கு நிதர்சனமாக காட்டிக் கொடுத்து விட்டது. இனியும் சந்தேகமென்ன? சாரதா நல்லவள்போல நடித்துத் தனக்குத் துரோகம் செய்யத் துணிந்து விட்டாள்.

பெண்ணுக்கு எத்தனை சுதந்திரம் கொடுத்து என்ன செய்ய? அவள் குணம் அவளை விட்டு எங்கே போகும்? சாரதாவுக்குப் பணத்திற்கு என்ன பஞ்சமா? வாங்குகிற சம்பளத்தை இஷ்டம்போல் மனங்குளிரச் செலவு செய்கிறாள். செலவு செய்வதோ செய்யாமலிருப்பதோ அவள் பொறுப்பு. அதில் மிஞ்சும் பணத்தைப் பகிரங்கமாகச் சேர்த்துக் கொள்ளட்டுமே! நான் குறுக்கே நிற்கிறேனா, அல்லது இதுவரை அவள் செலவுக்குப் பணம் கேட்டு என்றைக்காவது கொடுக்காமல் தான் இருந்திருக்கிறேனா? இப்படியெல்லாம் சதுவைக் காட்டும் எனக்கே துரோகம் செய்யத் துணிந்து விட்டாளே?

அவனுக்கு அந்தமாதிரி பணம் சேர்க்கும் பெண்களைக் கண்டாலே கட்டோடு பிடிக்காது. அவன் குணத்தை நன்கு அறிந்திருந்த சாரதாவே அம்மாதிரி செயலிலீடு பட்டதை எத்தனை சமாதானம் செய்தும் ஏற்க மறுத்தது மனம். இந்தக் குழப்பத்தில் பெட்டியை அப்படியே போட்டு விட்டு ஈஸிசேரில் சாய்ந்து விட்டான்.

சாரதா வந்ததும் வராததுமாகத் தன் பெட்டியைத்தான் போய்ப் பார்த்தாள், முதல்வேலையாக. சினிமா பார்க்கும் குஷியில் புறப்பட்டு விட்டாள். கொட்டகையில் போய் உட்கார்ந்த பிறகுதான் அவள் மனதில் அந்த அச்சம் தோன்றியது. ஒருவேளை நாம் இல்லாதபோது பெட்டியைக் கணவர் திறந்து பார்ப்பாரோ? ஒருவேளை அந்தக் கொம்பு அவர் கண்ணில் பட்டுவிடுமோ...குறத்தியின் எச்சரிப்பு அப்பொழுதும் கணீரென்று ஒலிப்பதுபோலிருந்தது. 'உன் புருஷனின் கண்ணில் பட்டுவிடக் கூடாது. ஜாக்கிரதை!' என்று அவள் கூறியிருந்தது நினைவிற்கு வந்தது. ஒருவேளை அவர் கண்ணில் பட்டு ஏதாவது விபரீதம் நேர்ந்துவிட்டால்...அச்சம் மெள்ள மெள்ள அவள் உள்ளத்தை அரிக்கத் தொடங்கியது. அவளுக்கு இருப்பே கொள்ளவில்லை. படம் முடிந்ததும் அவசர அவசரமாக வீட்டிற்கு விரைந்தாள்.

ஈஸி சேரில் சாய்ந்திருந்த கணவன் படத்தைப் பற்றி ஒன்றுமே பேசாமல் உம்மென்று இருந்தது, அவள் சந்தேகத்தைப் பலப்படுத்தியது. பெட்டியண்டை வந்து பார்த்ததும் அது இருந்த அலங்கோல நிலை அவள் நினைத்து வந்தது சரி என்று சாட்சி கூறியது. 'கணவன் அதைப் பார்த்து அதனால் என்னென்ன தீங்கு விளையுமோ? அது என்ன மந்திரக் கொம்போ?' என்று பயம் மூண்டது. கணவனுக்கு எவ்விதக் கெடுதியும் நேரக் கூடாதே என்கிற எண்ணமும் கூடவே எழுந்தது. கணவன்மீது கொண்டுள்ள அன்பு அவன்மீது கோபமாகப் பாய்ந்தது.

"ஏன் என் பெட்டியைத் திறந்தீர்கள்?"

பதிலே இல்லை. அவன் மௌனம் அவள் ஆத்திரத்தைக் கிளறியது.

"என்ன? நான் கேட்கிறேன், பதிலே பேச முடியவில்லையோ?"

"ஏன் இத்தனை படபடப்பு? குட்டு வெளிப்பட்டு விட்டதென்கிற அச்சமா?"—கோபத்திலும் நிதானமாக வார்த்தைகளை அளந்து பேசினான் ராமாமிர்தம்.

சந்தேகமேயில்லை. அவள் குட்டு வெளிப்பட்டுத்தான் விட்டது. இருந்தாலும் தைரியத்தை விட்டுக் கொடுக்காமல் "நான் இல்லாதபோது எதற்காக என் பெட்டியைத் திறந்தீர்களாம்?" என்று கேட்டாள்.

"ரகசியப் பணம் சேர்க்கும் துரோகத்தை விட இது பெரிய குற்றமாகாது என்று நினைத்துத்தான் திறந்தேன்..."

"என்ன? பணம் சேர்க்கிறேனா? அப்படி யார் சொன்னது?"

"நேராகப் பார்த்த பிறகு ஒருவர் சொல்லவும் வேண்டுமா?"

சட்டென்று சாரதாவுக்கு விஷயம் விளங்கி விட்டது.

குறத்தி அக்கொம்பை வர்ணித்த வர்ணனைகள் நினைவில் தோன்றின. தன் பிழைப்புக்காக அவள் பல கட்டுக் கதைகள் சொல்லித் தன்னிடம் ஒரு ரூபாய் பறித்துப் போய் விட்டாள். ஆண்கள் பெண்களைப் போல் சுலபத்தில் ஏமாற மாட்டார்கள் என்பதற்காகத்தான் ஆண்கள் கண்ணில் படக் கூடாதென்கிற பொய்யைக் கற்பித்துச் சொல்லியிருக்கிறாள்.

அந்தக் கொம்பினால் சாரதா அடைந்த பலன் என்ன? கொம்பு கைவசமிருக்கும் பெண்களிடம் கணவன் பெட்டிப் பாம்பாக அடங்கி நடப்பான் என்று வர்ணித்திருந்தாள் குறத்தி.

ஆனால் இங்கு நடந்ததென்ன? சண்டை இன்னதென்றறியாத குடும்பத்தில் கொம்பு வாங்கிய வேளை அதன் மூலமாகவே இருவருக்குள்ளும் சந்தேகம் மூண்டு சண்டைக்குக் காரணமாகியது. இதையெல்லாம் நினைத்தபோது சாரதாவுக்குச் சிரிப்புப் பொங்கியது.

"செய்கிறதையும் செய்துவிட்டுச் சிரிப்பு வேறு வாழ்கிறதோ?" என்று கடுகடுத்தான் ராமாமிர்தம்.

"இருங்கள், வருகிறேன்!" என்று உள்ளே ஓடியவள் அந்த டப்பாவை அப்படியே எடுத்து வந்து அவன் முன் வைத்தாள். நடந்தது முழுவதையும் ஒன்றுவிடாமல் கூறி முடித்தபோது இருவரும் சேர்ந்து சிரித்தனர். சண்டைக்குக் காரணமான கொம்பு பவளத்தோடு வெள்ளி நாணயத்தையும் சேர்த்துத் தலையைச் சுற்றித் தூக்கி எறிந்தபிறகுதான் சாரதாவின் மனதில் நிம்மதி தோன்றியது.



"என்னை மேஸ்திரி நேற்று வேலையிலிருந்து நீக்கி விட்டான்!"

"ஏன்?"

"நான் வேலை செய்யாமல் இருந்ததைக் கண்டு எல்லோரும் என்னை மேஸ்திரி என்று நினைந்து விட்டார்களாம்!"

# நல்லாடை அணிந்த ஆண்கள் பளபளப்பான பாதரக்ஷைகளை அணிகிறார்கள்



உலகில் சிறந்த ஆடைகளை நீங்கள் அணியலாம். ஆனால் பாதரக்ஷைகளை கொண்டுதான் உமது நாகரீகத்தை மதிப்பிடுவார்கள். நல்லாடையுடுத்த ஆண்கள் எல்லோரும் பளபளப்பான பாதரக்ஷையணிகிறார்கள். உலகமெங்கும் வெற்றிக்கு முதல்படியது. பாதரக்ஷையை கவனியுங்கள் — கீவி பாலிஷை உபயோகியுங்கள். அது அவற்றை மென்மையுறக்காப்பதுடன், பளபளப்பாகவும் பிரகாசமாகவும் இருக்கச் செய்கிறது. கீவி பாலிஷ் வேண்டுமென்று கேளுங்கள். எப்போதும் நல்ல தோற்றமளிக்க வேண்டுமென்று கருதுங்கள்.

# கீவி




பாலிஷ் செய்யும் போதே போஷாக்களிக்கிறது.

விநியோகஸ்தர்கள்: ஆர். ஏ. குட்லர் & கோ., மதராஸ் - 1

---

## அரித்து, எரிந்து கொப்பளிக்கும் எக்ஸிமா 10 நிமிஷத்தில் குணமடைகிறது



BEFORE



AFTER

நிக்ஸோடேர்ம் கண்டு பிடிக்கப் பட்டதிலிருந்து இனி யாரும் எக்ஸிமா, பரு, ரத்தக் கட்டிகள் ஆகிய சரும வியாதிகளால் அவதியுறவும், உங்களுக்கும் பிறருக்கும் வெறுப்பு ஏற்படவும் வேண்டாம். ரஸாயன முறையில் தயாரித்த நிக்ஸோடேர்மினால் சருமத்தை சுத்தமாக்குங்கள். அனுயாசமாக வைத்துக் கொண்டு, பிறர் உங்களை வியாதியஸ்தரெனக் கருத இடம் கொடுக்காதீர்கள்.

### ஒரு புதிய சாதனம்

நிக்ஸோடேர்ம் ஒரு புதிய களிம்பு. ஆனால் நீங்கள் கண்டு உபயோகித்த இதர களிம்பைப் போன்றதல்ல. பிசுக்கற்றது. மேலே தடவிக் கொள்ளும்போது ஒரு பவுடரைப் போல உணருவீர்கள். சருமத் துவாரங்களினூடே சென்று வியாதிக்கு மூலமான இடத்தைத் தாக்குகிறது. நிக்ஸோடேர்ம் மூன்று வழிகளில் உபாதையைத் தாக்குகிறது: (1) நோய்க்குக் காரணமாகும் கிருமிகளைத் தாக்கிக் கொல்லுகிறது. (2) அரித்து, எரிந்து வெந்து போவதை 7 முதல் 10 நிமிஷங்களில் தடுத்து சருமத்தை மென்மையாக்குகிறது. (3) இயற்கையாகவே ஆற்றி, சுத்தமாக மிருதுவாகப் பட்டுப்போல வழவழப்பாகவும் ஆக்குகிறது.

### விரைவில் பலனளிக்கிறது

சரும நோய்களை நிவர்த்திக்கவே விஞ்ஞான முறையில் தயாரான நிக்ஸோடேர்ம் வேறெதையும்விட சீக்கிரமாக வேலை செய்கிறது. நமைச்சல், எரிச்சல் ஆகியவற்றை சில நிமிஷங்களில் நிறுத்தி விரைவில் சருமத்தை சுத்தமாக ஆற்ற, மிருதுவாகவும் வழவழப்பாகவும் செய்கிறது. ஓரிரண்டு தினங்களில் கண்ணாடியில் பார்த்துக் கொள்ளுங்கள். தேடிய சஞ்சீவி — நாடிய வைத்தியம் கிடைத்ததை உணருவீர்கள். நிக்ஸோடேர்ம் ஆயிரக்கணக்கானவர்களுடைய சருமத்தைச் சுத்தமாக்கி புஷ்டியாக்கியது. அவர்களில் ஒருவரான மிஸ்டர் R. K. கூறுகிறார். "பன்னிரண்டு வருஷங்களாக நமைச்சலும் எரிச்சலும் தரும் எக்ஸிமாவினால் கஷ்டப்பட்டேன். பல மருந்துகளுக்குப் பிறகு நிக்ஸோடேர்ம் உபயோகித்தேன். 10 நிமிஷங்களில் நமைச்சல் நின்று மறுநாளே சருமம் சுத்தமாகியது. என் தோற்றத்தில் ஏற்பட்ட மாறுதலைக்கண்ட என் நண்பர்கள் ஆச்சரிய மடைந்தனர்."

### திருப்திக்கு உத்தரவாதம்

சருமம் திருப்தியாக சுத்தமாகாதவரை நிக்ஸோடேர்ம் மதிப்பை இழக்கிறது. இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். தோற்றத்தில் ஏற்படும் அபிவிருத்தியைக் கண்டு ஆச்சரியப் படுவீர்கள். மேலும் ஒரு வாரத்திற்கு உபயோகித்தால் சருமம் வழவழப்பாயும் மிருதுவாயும் சுத்தமாயும் வசீகரமாகவும் ஆவது நிச்சயம். இல்லையேல் அதன் காலிப் பெட்டியைத் திருப்பிக் கொடுத்து, நீங்கள் கொடுத்த விலையை வாபஸ் பெறுங்கள். இன்றே ஒரு நிக்ஸோடேர்ம் வாங்குங்கள். அதற்களித்த உத்தரவாதமே உங்களுக்கு உறுதி.

# ஹேமாவின் பிரேமை

**வ. சா. நாகராஜன்**

உலகத்தில் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொன்றின் மீது ஆசை உண்டாகிறதல்லவா? அதுபோல மூக்குக் கண்ணாடி போட்டுக் கொள்ள வேண்டும் என்ற ஆசை எனக்கு எப்படியோ பிடித்து விட்டது.

உடனே ஒரு மூக்குக் கண்ணாடி வாங்கினேன். கேட்பவர்களுக்கெல்லாம் "காற்றில் கண்ணுக்குப் புலப்படாத கிருமிகளும் தூசிகளும் இருப்பதாக விஞ்ஞானிகள் சொல்லுகிறார்கள்; அதனால் நம் கண்களைப் பாதுகாப்பில்லாமல் வெறுமனே திறந்து வைத்துக் கொண்டிருந்தால் ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் எந்தத் தூசியாவது கிருமியாவது கண்களுக்குள் புகுந்து விடும். அப்படி நேராமல் இருக்கத்தான் முன்னேற்பாடாகக் கண்ணாடி போட்டுக் கொண்டு என் கண்களைப் பாதுகாத்துக் கொள்கிறேன்" என்று சொல்லிக் கொண்டு கண்ணாடியைப் போட்டுக் கொண்டேன்.

ஆனால் மூக்குக் கண்ணாடி என் உருண்டை முகத்திற்கு எடுபடவில்லை. மாம்பழம் மாதிரி இருந்த முகத்தில் கண்ணாடி நிற்பதற்கே இடம் இல்லாமலிருந்தது. அத்துடன் முகத்தையும் ஒரே விகாரமாக்கி விட்டது. கண்டவர்கள் எல்லோரும் கரித்துக் கொட்ட ஆரம்பித்து விட்டார்கள். ஆகவே நாற்பது ரூபாய் செலவு செய்து அழகான பிரேமுடன் கூடிய மூக்குக் கண்ணாடியைப் போட்டுக் கொண்ட நான் அதை அன்றே கழற்றி வைக்கும்படியாகி விட்டது.

'எனக்குத்தான் இந்த ஜன்மத்தில் கண்ணாடி போட்டுக் கொள்ளக் கூடிய பாக்கியம் இல்லை. எனக்கு வரப்போகும் மனைவியாவது கண்ணாடி போட்டுக் கொண்டிருப்பவளாக இருக்க வேண்டும்' என்ற ஆசை என் உள்ளத்தில் வளர்ந்தது. என் உள்ளத்தின் உள்ளே நான் இந்தமாதிரி ஆசையை வளர விட்டுக் கொண்டிருக்கும் போது என் பெற்றோர் எங்கேயோ கோதண்டராம புரத்தில் குமுதம்மாள் என்ற பெயருடைய பெண்ணைப் பார்த்திருப்பதாகவும், தானப்பாளையத்தில் தர்மாம்பாள் என்ற பெண்ணைப் பார்த்திருப்பதாகவும் கடிதம் எழுதிக் கொண்டிருந்தார்கள். இப்படி வரும் பெண்களின் பெயர்களைப் பார்த்தாலேயே கண்ணாடிக்கும் இவர்களுக்கும் காத தூரம் என்று தெரிந்தது.

எப்பொழுதும் இதே யோசனை. கண்ணாடி போட்டுக் கொண்டிராத பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டு, பிறகு, அவள் என் வீட்டிற்கு வந்த பிறகு கண்ணாடியைப் போட்டுக் கொள்ளச் செய்யலாம் என்றால் அதற்கு அவள் சம்மதிப்பாள் என்பது என்ன நிச்சயம்? இந்த மாதிரியெல்லாம் நான் யோசனை செய்து கொண்டிருந்த போது, பாலைவனத்தில் நடந்து கொண்டிருந்தவனின் கண்களில் ஒரு சோலைவனம் தென்பட்டது போலவும், திக்குத் தெரியாத காட்டில் அலைந்து கொண்டிருந்தவனின் கண்களில் 'எலக்ட்ரிக் லைட்' எரிந்து கொண்டிருந்த ஒரு வீடு தெரிந்தது போலவும் என் தகப்பனாரிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் இருந்த ஒரு வாக்கியத்தைப் படித்ததும் என் உடலும் உள்ளமும் உடனே ஆகாயத்தில் பறந்தன. ஆனால் அடுத்த வாக்கியமே, அப்படி ஆகாயத்தில் பறந்து கொண்டிருந்த என் உடலையும் உள்ளத்தையும் திடீரென்று கீழே தள்ளிவிட்டது. என் அருமைத் தந்தையின் கடிதம் இதுதான்:

**குமாரமங்கலத்தில் ஒருவருடைய பெண்ணை உனக்காக நானும் உன் தாயாரும் போய்ப் பார்த்துவிட்டு வந்தோம். பெண்ணின் பெயர் ஹேமா. நல்ல இடம். சீர் எல்லாம் நன்றாகச் செய்வார்கள் போலிருந்தது. பெண்ணும் நல்ல சிவப்பு. ஆனால் அந்தப் பெண் கண்ணாடி போட்டுக் கொண்டிருப்பதனால் வீட்டுக் காரியங்களுக்கெல்லாம் சரிப்படுமோ, படாதோ என்று நாங்கள் வந்துவிட்டோம். —அப்பா.**

என் தலை சுற்றிற்று. கண்கள் இருண்டன. உட்கார்ந்திருப்பது ஆபீஸிலா, அல்லது ஆகாய விமானத்திலா என்று சந்தேகம் வந்து விட்டது. ஆஹா! கடைசியில் கண்ணாடி போட்டுக் கொண்டிருக்கும் பெண் கிடைக்க இருந்தாள். ஆனால் நம்முடைய சமூகம் இன்னமும் முன்னேறாததனால், கண்ணாடியின் அவசியம் உலகோர்க்குச் சரிவரத் தெரியாததனால், என் வாழ்க்கையிலே வர இருந்த



"என்ன போஸ்ட்மேன், நாலாவது மாடியில் இருப்பவர் பெரிய வியாபாரியோ? தினம் அவருக்குக் கடிதம் வருகிறதே!"

"இல்லை ஸார்! அன்று ஒரு நாள் நான் அவருடன் சண்டை போட்டேன். அன்றைய தினத்திலிருந்து அவரே தினம் ஒரு கடிதம் எழுதிப் போட்டு என்னை நாலு மாடிகள் ஏறி இறங்க வைக்கிறார்!"

அதிருஷ்டம்; என் இலட்சியம் எல்லாம் போய் விட்டது! போயே போய்விட்டது!

இந்தமாதிரி எண்ணங்களினால் மனம் தவிக்கவே ஆபீஸில் வேலை ஓடவில்லை. என் நண்பன் ராஜகோபாலனின் இடத்திற்குச் சென்று அவனிடம் என் தகப்பனாரிடமிருந்து வந்திருந்த கடிதத்தைக் காண்பித்தேன். கண்ணாடியைப் பற்றிய என் கொள்கை அவனுக்கும் கொஞ்சம் தெரியும்.

கடிதத்தைப் பாதிவரை படித்து முடித்த ராஜகோபாலன் துள்ளிக் குதித்தான். "குமாரமங்கலமா? அடேடே! பெண்ணின் பெயர் என்ன, ஹேமாவா?" என்று சொல்லிக் கொண்டே மறுபடியும் துள்ளிக் குதித்தான். அவனுடைய பரபரப்புக்குக் காரணம் என்னவென்று புரியாமல் நான் தவித்துக் கொண்டிருந்தபோது அவனே சொன்னான்: "குமாரமங்கலம் ஹேமாவை நான் பார்த்திருக்கிறேன். பனங்குடியில் இருக்கும் என் சித்தி வீட்டுக்கு இரண்டு வீடுகள் போட்டுக் கிழக்கே வீடுதான் ஹேமாவின் வீடு. அவளுடைய தாயைப் பெற்ற பாட்டியின் ஊர்தான் பனங்குடி" என்றான் ராஜகோபாலன்.

"அப்பொழுது!"

"கவலைப்படாதே! ஹேமா, காடாறு மாதம் நாடாறு மாதம் ஆண்ட விக்கிரமாதித்த ராஜா மாதிரி தகப்பனார் வீட்டில் ஆறுமாதமும் பாட்டி வீட்டில் ஆறு மாதமும் வசிப்பாள். கடவுளின் அனுக்கிரகத்தினால் அவளுக்கு மாத்திரம் இந்தப் பதினைந்து நாட்கள் முடிந்து ஆடி பிறப்பதற்குள் கல்யாணம் ஆகாமலிருந்தால் ஆடி மாதம் முதல் தேதியே ஹேமா பனங்குடி வந்து விடுவாள். நானே உன்னை அங்கே அழைத்துப் போகிறேன்" என்றான்.

"ஆண்டவனே, இந்தப் பதினைந்து நாட்களுக்குள் அந்தப் பெண்ணுக்கு எங்கேயாவது கல்யாணம் ஆகிவிடாமல் இருக்க வேண்டுமே!" என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

ஆடி பிறந்தது. சில நாட்களுக்கெல்லாம் நானும் ராஜகோபாலனும் பனங்குடியில் போய்க் குதித்தோம். வந்து நான்கைந்து நாட்கள் ஆகியும் அந்தப் பெண்ணைப் பார்க்க முடியவில்லை. தினம் சாயங்காலம் சர்வ சிரத்தையாகக் கோயிலுக்குப் போனோம். கொளுத்தும் வெய்யிலில் மேலக் கோடிக்கும் கிழக் கோடிக்கும் அந்த ஊர்த் தெரு நாயுடன் நான் மாத்திரம் அலைந்தேன். கண்ணாடி கொண்ட அந்தப் பெண்ணின் முகம் எந்த வீட்டு ஜன்னலிலாவது, முற்றத்திலாவது, ரேழியிலாவது ஒரு தடவையாவது தென்படாதா என்றுதான். ஆனால் அப்படி என்னவோ ஒரு தடவைகூட நடக்கவில்லை. ஒருகால் அந்தப் பெண் இன்னும் பனங்குடிக்கு வந்து சேரவே இல்லையோ என்று ராஜகோபாலனிடம் சொன்னேன். "நிச்சயமாக வந்து விட்டாள். எனக்குத் தெரியும்" என்று அடித்துச் சொன்னான் அவன்.



லாண்டரிக்காரர்:—என்ன ஐயா, உம்முடைய கோட்டு வந்து சேரவில்லை என்கிறீரே! உம் துணிகளில் வழக்கமாக என்ன அடையாளம் செய்திருப்பேன் என்று ஞாபகம் இருக்கிறதா?

வந்தவர்:—இருக்கிறது! காலரைக் கிழித்து, பித்தான்களை உடைத்திருப்பாய்!

எங்களால் செய்யக்கூடிய முயற்சிகளினால் அந்தப் பெண்ணைப் பார்க்க முடியாது என்று தெரிந்தவுடன் ராஜகோபாலனின் சித்தியின் மூலமாக முயற்சி செய்து பார்ப்பது என்று தீர்மானித்து அவளிடம் சரணாகதி அடைந்தோம். ராஜகோபாலன் சித்தியிடம் நாங்கள் அந்த ஊருக்கு வந்த காரணத்தையும் மற்றும் உள்ள விஷயங்களையும் ஆதியோடந்தமாக எடுத்துச் சொன்னோம். "இவ்வளவுதானே! ஒரு கல்யாணத்தைப் பண்ணிவைக்கிறதென்றால் எவ்வளவோ புண்ணியம்!" என்று சொல்லி எனக்குத் தைரியம் கூறினாள் சித்தி.

சித்தி அந்தப் பெண்ணிடம் என்ன பேசினாளோ, என்ன சொன்னாளோ; மறு நாள் மத்தியானம் நானும் ராஜகோபாலனும் வீட்டு ஊஞ்சலில் உட்கார்ந்து கொண்டிருந்தபோது அந்தப் பெண்ணையே அழைத்துக் கொண்டு வந்து விட்டாள்.

ஆஹா! அவள் என்ன அழகான கண்ணாடி போட்டுக் கொண்டிருந்தாள்! அந்தக் கண்ணாடிதான் அந்தப் பிரேமுக்கு எவ்வளவு ஏற்றமாக இருந்தது!

அவள் போட்டுக் கொண்டிருந்த கண்ணாடியை முதலில் பண்ணியிருப்பார்களா, அல்லது அந்த பிரேமை முதலில் பண்ணியிருப்பார்களா, என்று நான் யோசித்துக் கொண்டிருந்தபோது நண்பன் என் கையைப் பிடித்துக் கிள்ளினான். சுய நினைவு வந்தவுடன் சித்தியை நோக்கி "இந்தப் பெண் குமாரமங்கலம் ஹேமா இல்லையா?" என்று கேட்டு வைத்தேன்.

அந்தப் பெண் என் முகத்தை ஒரு தடவை ஏறிட்டுப் பார்த்தாள். அவளுக்கு என்னைப் பார்ப்பதற்கு முழுச் சந்தர்ப்பமும் கொடுக்

கும்பொருட்டு நான் தரையைப் பார்த்துக் கொண்டிருந்தேன்!

அதற்குள் ராஜகோபாலன் சொன்னான்: "முன்பு ஒரு தடவை நானும் இவனும் குமாரமங்கலத்திற்குப் போயிருக்கிறோம், இவர்கள் வீட்டுத் தெருவின் கிழக்கோடி வீட்டுக் கல்யாணத்திற்காக."

அந்தப் பெண் வாய்க்குள் சிரித்தாள்.

"என்னடி?" என்று கேட்டாள் சித்தி.

"எங்கள் ஊர்த் தெரு தெற்கு - வடக்காக வல்லவா இருக்கிறது?" என்று சொன்னாள்.

ராஜகோபாலனுடைய முகத்தில் அசட்டுக் களை ஒன்று தவழ்ந்தது.

எப்படியோ பார்த்துப் பேசியாகிவிட்டது. அது போதாதா?

* * *

அன்று சாயங்காலமே ஒரு கடிதத்தைத் தயார் செய்தேன். அதில் என்னுடைய கண்ணுடி பிரேமையை முக்கியமாகக் குறிப்பிட்டுவிட்டு "அவன் என்னை ஒரு முறை பார்த்துவிட்டதனுல், அவனுடைய சம்மதம் தெரிந்தால் என் அப்பாவிடமும் அவனுடைய அப்பாவிடமும் சொல்லிக் கல்யாணத்திற்கு ஏற்பாடு செய்ய முயற்சி செய்கிறேன்" என்று நாசுக்காக எழுதி ஒரு வாண்டுப் பயலைப் பிடித்து அவனிடம் கடிதத்தைக் கொடுத்து அவனிடம் சேர்ப்பித்தேன்.

அன்று ராத்திரி முழுவதும் தூங்காமல் நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த கடிதம் மறுநாள் காலையில் வந்தது. இதயம் விம்ம, மூச்சு நின்றுவிட, உடலில் இருந்த ரத்தம் அப்படியே உறைந்து போய்விட, உடல் முழுவதும் வியர்த்துக் கொட்ட அந்தக் கடிதத்தைப் படித்தேன்.

"அடிக்கடி கடிதம் எழுதத் தெரிந்திருக்கும் உங்கள் சாமர்த்தியத்தையும் தைரியத்தையும் மெச்சுகிறேன்.

உங்களையும் எனக்குப் பிடிக்கிறது.

ஆனால் அது நடக்க முடியாதது போல் இருக்கிறது. காரணம் இதுதான்.

நான் என் சிறுவயதிலிருந்தே இந்தக் கண்ணுடியில் ஒரு பிரேமை கொண்டு விட்டேன். இந்த பிரேமயில் நான் கொண்டுள்ள பிரேமை மகத்தானது. இந்த வாழ்வில் நான் மறக்க முடியாதது.

அத்துடன் எனக்கு வரவேண்டிய கணவரும் கண்ணுக்கு நிறைந்த கண்ணுடியுடன் கூடியவராக இருக்க வேண்டும் என்று இரவு பகலாகப் பிரார்த்தித்துக் கொண்டிருக்கிறேன்.

ஆகவே தங்களுடைய கடிதத்திற்குச் சாதகமான பதிலை அனுப்ப முடியாமைக்குப் பெரிதும் வருந்துகிறேன்.

ஹேமா"

கடிதத்தை நான் ராஜகோபாலனிடம் காண்பிக்கவில்லை. சித்தியிடம் கூடக் காண்பிக்கவில்லை. பெட்டியையும் படுக்கையையும் சித்தியின் வீட்டிலேயே போட்டுவிட்டு ரெயில்வே ஸ்டேஷனுக்கு வந்து அங்கு நின்று கொண்டிருந்த ரயிலில் ஏறி உட்கார்ந்தேன். சென்னைக்கு வந்து இறங்கிய பிறகுதான் எனக்கு நிம்மதியாக மூச்சு வந்தது!

# காரணம் என்ன?

அன்று ஞாயிற்றுக் கிழமை. எனது நண்பர் ஜகந்நாதன் தன் வீட்டில் நடக்கும் சங்கீதக் கச்சேரிக்கு ஐந்து மணிக்கே வந்து விடும்படி என்னை அழைத்திருந்தார். அவருடைய சகோதரி தான் அன்று பாடப் போகிறதாகச் சொல்லியிருந்தார். என்னைப் போல் பலரையும் அந்தக் கச்சேரிக்கு அழைத்திருப்பதாகவும் சொன்னார். அவர் வேண்டுகோளுக் கிணங்கி நானும் அன்றையக் கச்சேரிக்கு வருவதாக ஒப்புக் கொண்டேன்.

மாலை ஐந்து மணி அடித்ததும் 'மேக்'காக டிரஸ் செய்து கொண்டு நண்பரின் வீட்டை நோக்கிப் புறப்பட்டேன். வெகுநேரம் வரை பஸ்ஸுக்காகக் காத்திருந்தேன். பாழும் பஸ் எப்பொழுதும் போல் என்னைச் சோதனை செய்து விட்டது. என்ன செய்வது? நடந்தே அவர் வீட்டை யடைந்தேன். நண்பரின் இல்லத்தையடைந்த போது அவர் வீட்டின் தோட்டக் கதவு உள்ளே தாளிடப் பட்டிருந்தது. தோட்டத்தினுள் நின்ற தோட்டக்காரனைக் கூவி யழைத்து, "இந்தாப்பா! சீக்கிரம் கதவைத் திற. கச்சேரி கேட்கப் போக வேண்டும்" என்றேன்.

தோட்டக்காரன் தயங்கியபடியே நின்றான். அவன் கதவைத் திறக்காமல் திகைத்து நின்று கொண்டிருப்பதைப் பார்த்ததும் என் கோபம் அதிகமாயிற்று. "சீக்கிரம் கதவைத் திறந்து விடு. உள்ளே போக வேண்டும்" என்றேன்.

"யார் வந்தாலும் சரி, கதவைத் திறக்கக் கூடாது என்று எஜமானர் கண்டிப்பாக உத்தர விட்டிருக்கிறார்" என்று சொன்னான் தோட்டக்காரன்.

"என்ன நிஜமாகவா? எதற்காக அப்படிக் கண்டிப்பாகக் கட்டளை யிட்டிருக்கிறார்?" என்று மிகுந்த கோபத்துடன் கேட்டேன். எனது நண்பர் என்னை வேண்டுமென்றே அவமானப்படுத்துவதற்கு இப்படிக் கட்டளை யிட்டிருக்கிறாரோ என்று எனக்குத் தோன்றியது.

"ஸார்! கோவிச்சுக்காதிங்க. கச்சேரியில் உட்கார்ந்திருப்பவர்களுக்குத் தோட்டக் கதவு திறந்திருப்பது தெரிந்தால் எல்லோரும் அங்கிருந்து எழுந்திருந்து போய் விடுவார்கள். அப்புறம் என் எஜமானரின் பெருங் கோபத்துக்கு நான் ஆளாக வேண்டியது தான்" என்று பதிலளித்தான் தோட்டக்காரன்.

அவனுடைய பதிலைக் கேட்டதும் என் கோபம், ஆத்திரம் எல்லாவற்றையும் மறந்து நான் நன்றாகச் சிரித்து விட்டேன். தோட்டக்காரனும் என்னுடைய சிரிப்புக்கு அர்த்தம் தெரியாமல் விழித்தான். — பி. எஸ். மணி.

# ஆரோக்கிய ரகசியம்

வி. என். குமாரஸ்வாமி

## 2. என்றும் இளமை!

“ஏனையா! சிரசாசனம் செய்பவர்களுக்குத் தான் மூளைக்கு ரத்தம் போகுமா? மற்றவர்களுக்கெல்லாம் ரத்தம் மூளைக்கு ஏறாமல் வாழ்கிறார்களா! அவர்களெல்லாம் மூளையை உபயோகிக்கவில்லையா! இவர் என்னமோ புதிதாய் சிரசாசனம் செய்தால் தான் மூளைக்கு நல்ல ரத்தம் கிடைக்குமென்று சாதிக்கிறாரே” என்று பல கேள்விகளைக் கேட்கும் அறிஞர்களும் உளர்.

சிரசிற்கு ரத்தம் எல்லோருக்கும் சென்று கொண்டிருப்பதால் தான் நாம் வாழ முடிகிறது. காரியம் செய்ய முடிகிறது. ஆனால் இது ஒரு அளவுக்குத் தான் நடைபெறும். இயற்கை ஒரு அளவுடன் தான் வேலை செய்யும். உடலிலுள்ள அவயவங்களில் சில, பிறந்தது முதல் தேய்ந்து கொண்டே போகும். சில வளர்ச்சி அடைந்து குறையும். சில வளர்ச்சி அடைந்து கொண்டே போகும். இவைகளில் இருதயமானது பிறந்தது முதல் வேலை செய்து நடுவயதானதும் குறையும் தன்மை உடையது. இது சுமார் நாற்பது வயதுவரை ஒழுங்காய்த் தன் வேலையைச் செய்யும். அதன்பின் அதன் பருமன், எடை, துடிப்பு முதலியவை குறையும். ரத்த நாளங்களின் வழி சிறுத்துவிடும். இருதயத்தின் பெரிய நாடிகள் சீர்கெட்டுப் போகும். இரத்தத்திலுள்ள சக்தி குறைவு படும். இவ்வளவும் இயற்கை ஆரோக்கிய விதிகளை அனுசரித்து, வாழ்க்கை எனும் பாதையில் ஒழுங்காய் நடந்து வருபவர்களுக்குத்தான். இயற்கை விதிகளிலிருந்து மாறுபட்டு நடப்பவர்களைப் பற்றிச் சொல்லவே வேண்டியதில்லை. இருபது வயதிலும் இருதயம் பலவீனமடையலாம். முப்பது வயதிலும் கெடலாம். இவைகளெல்லாம் அவரவர்களின் ஒழுக்கத்தைப் பொறுத்திருக்கிறது.

இருதயத்தின் வேலை, தன்னிடம் வரும் ரத்தத்தை அடித்தடித்துச் சரீர முழுவதற்கும் அனுப்ப வேண்டியது. அது அடிக்கும் விசையினால் பூமியின் ஆகர்ஷண சக்தியையும் எதிர்த்துக் கொண்டு சிறிதளவு சிரசிற்குப் ரத்தம் செல்லுகிறது. எப்படி உயரத்திலுள்ள தண்ணீர்த் தொட்டியிலிருந்து இறங்கி வரும் ஜலமானது, கீழே இயங்கும் விசையினால், அந்தத் தொட்டியை விட சில அடி உயரமான இடத்திற்கும் வரமுடிகிறதோ, அதைப் போல இருதயம் சிரசிற்குக் கீழே மார்பில் இருந்தாலும் அதிலிருந்து இரத்தம் அடித்துத் தள்ளப்பட்டு இறங்கி வரும் வேகத்தில் சிரசிற்கும் செல்லுகிறது. இது இருதயம் நல்ல நிலைமையில் உள்ள மட்டும் தான். நாற்பது வயதிற்கு மேல் அதன் பருமன், எடை, துடிப்பு குறையும் போது தலைக்குப் போதுமான ரத்தம் கிடைக்காது. அதனால் மூளைக்குப் போஷணை குறையும். பிறகு மூப்பின் தோற்றம் உண்டாகத் தொடங்குகிறது. மறதி, அசதி, கோபம், வெடு வெடுப்பு, நரம்புத் தளர்ச்சி முதலியன உண்டாகின்றது. “நாற்பது வயதுக்கு மேல் நாய்க் குணம்” என்பார்கள். அது இதனால்தானோ என்னவோ! மூப்பின் குறியாக முகச் சுருக்கம், முடி வெளுத்தல், கண் பார்வைக் குறைவு, ருசிக் குறைவு, காது மந்தம், பல் ஆட்டம் முதலியன சிறுகச் சிறுக ஆரம்பித்து வளர்ச்சி அடைந்து கொண்டே போகின்றன. இது நாம் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் இயற்கை தன் கடமையைச் செய்தே தீரும்.

இந்தக் காலத்தில் வயதானவர்களுக்குத்தான் இந்த அறிகுறிகள் ஏற்படுகின்றது என்பதில்லை. இருபது வயது கிழவர்களும் இருக்கிறார்கள். முப்பது வயது பாட்டன்மார்களும் வாழ்கிறார்கள். நாற்பது வயது தொண்டு கிழவர்களும் தென்படுகிறார்கள். என்னே கொடுமை! இருபது முப்பது வயதில் மூப்பு தட்டி, நாற்பது வயதில் கிழமாய் விடுவதென்றால், கேட்கச் சகிக்கவில்லை! பார்க்கவும் கூசுகின்றது!

இவைகளையெல்லாம் திருத்தி வாழவேண்டுமானால் நாம் இயற்கையுடன் சேர்ந்தாற்போல் அதன் குணத்தை அறிந்து நாம் போரிட்டு ஜயிக்க வேண்டும். இயற்கையின் குணம் எந்தப் பொருளையும் தன் வசம் இழுப்பது. நாமே தலைகீழாக நின்று விட்டால் இயற்கையின் துணை கொண்டு இயற்கையை ஜயித்தவர்களாகின்றோம். ரத்தம் மூளைக்கு நன்கு பாய்கிறது. அதனால் மூளை பலப்படுத்தப்பட்டு, மூப்பை, நரம்புத் தளர்ச்சியை, பலஹீனத்தை விரட்டுகிறது. மற்றப்படி மூளையைப் பலப்படுத்த ஒன்றுமே கிடையாது. மூளைக்கு நேராய் பாதாம் ஹல்வாவையோ, குலாப் ஜாமூனையோ திணிக்க முடியாது. அதற்கு வேண்டியது இரத்த போஷணை தான்.

சிரசாசனம் செய்பவர்கள் வயதானவர்களாய் இருந்தாலும், அவர்களின் உள் அவயவங்கள் எல்லாம் திறமையுடன் இருக்கும். உதாரணமாக



மனைவி:—இதற்கு இப்படிக் கோபித்துக் கொள்கிறீர்களே? வழக்கமாக உங்களுக்கு வருகிற கடிதங்களை நான் பிரித்துப் பார்ப்பது கிடையாது. இந்தக் கடிதத்தில் மட்டும் ‘பிரைவேட்’ என்று போட்டிருந்ததே என்று பிரித்துப் பார்த்தேன்!

நமது மாபெருந் தலைவர் ஸ்ரீ நேருஜியை எடுத்துக் கொள்ளலாம். அவர் நான் தவறாமல் சிரசாசனம் செய்கிறார். இதை அவரே பல முறை வெளியிட்டிருக்கிறார். அவர் சமீபத்தில்கூட "நான் வயதானவன் என்று சிலர் சொல்லுகின்றார்கள். ஆனால் என் உள்ளம், உணர்ச்சி எல்லாம் வாலிபர்களைப் போன்றது. நான் வாலிபர்களைப் போல் வேலை செய்ய முடியும்" என்று சொல்லியிருக்கிறார். இது வெறும் அரசியல் மேடையின் அலங்கார வார்த்தையல்ல. உணர்ச்சியின் வசப்பட்டு உளறும் சொற்களல்ல. உண்மையில் அவர் அப்படியேதான் இருக்கிறார் என்பது முற்றிலும் உண்மை. அவர் தவறாமல் சிரசாசனம் செய்வதால் அவருடைய உள் அவயவங்கள் எல்லாம் தேயாமல், குறையாமல் இருக்கின்றன.

என்னையே நான் உதாரணமாகச் சொல்ல முடியும். இதில் நேருவுடன் நான் சமத்துவம் கொண்டாடுவதாகவாவது அவருடன் போட்டி போடுவதாகவாவது யாரும் நினைத்துக் கொள்ளக் கூடாது. அவர் தியாகத்தின் சிகரம், சேவையின் இருப்பிடம். நான் மிகச் சாதாரண மானவன். ஆனால், உடல் ஆரோக்கியத்தில் அவருடன் என்னையும் சேர்த்துக் கொள்ள வேண்டியதுதான்.

இந்த உண்மையும் அதாவது என் உடலின் ஆரோக்கியத்தைப் பற்றிய உண்மையும் சில நாட்களுக்கு முன்புதான் எனக்கே தெரிய வந்தது. எனக்கு இப்பொழுது வயது ஐம்பத்து ஒன்று ஆகிறது. என் குடும்பத்தினருக்காக என் ஆயுளை இன்ஷ்யூர் செய்ய விரும்பினேன். ஐம்பது வயதிற்குமேல் இன்ஷ்யூர் செய்ய வேண்டுமானால் உயரிய டாக்டர்கள் நன்கு பரிக்ஷித்தால்தான் முடியும் என்றனர். ஒரு பெரிய டாக்டர் என்னை சுமார் ஒரு மணி நேரம் பலவித பரீட்சைகள் செய்து பார்த்தார். என் வயதைக் கேட்டார். ஐம்பத்து ஒன்று ஆகிறது என்று சொன்னேன். மறுபடியும் பரீட்சித்தார். பிறகு அவர் "நீங்கள் ஐம்பத்தோர் வயது என்று சொல்லுகின்றீர்கள். தோற்றமோ இன்னும் சிறிது குறைத்து மதிப்பிடலாம். ஆனால் உங்கள் உள் அவயவங்களெல்லாம் முப்பத்து ஐந்து வயதினருக்கு எப்படியிருக்க வேண்டுமோ அப்படியிருக்கின்றது. இருதயம் முப்பத்தைந்து வாலிப வயதினரைப் போல் இருக்கிறது. நாடிகளும் முப்பத்தைந்து வயது இளைஞரைப் போல் துடிக்கின்றது. இது எப்படி சாத்தியம் என்று எனக்குப் புரியவில்லை" என்றார்.

பிறகு என் வரலாற்றைச் சொன்னேன். "நான் முப்பத்தைந்து வயதில் ஆசனம் செய்யத் தொடங்கினேன். இதுவரை எந்தக் காரணத்தைக் கொண்டும் ஒருநாள் கூட இடையில் விட்டு விடாமல் செய்கிறேன். ஆசனம் செய்ய ஆரம்பித்த பின் ஒருவித வியாதியும் எனக்கு வந்ததேயில்லை. மிகவும் ஆரோக்கியமாகவும். சுறு சுறுப்பாயும் இருக்கிறேன்" என்றேன். அவர் மிகச் சந்தோஷமடைந்து வைத்தியத் தேர்தலில் எனக்கு முதல் வகுப்புத் தேர்வுச் சீட்டைக் கொடுத்து விட்டார்.

இதை அந்த இன்ஷ்யூர் கம்பெனியார்கள் நம்பவில்லை போலும். ஐம்பத்தோரு வயது கிழவருக்கு எல்லா அவயவங்களும் சரியாக யிருப்பதென்றால், இது நடக்கக் கூடிய காரியமா! என்னை ஏதோ தெரிந்தவர் என்று ஒருக்கால் பிரிமியம் குறைவாய்க் கட்டுவதற்காக அப்படி எழுதப்பட்டிருக்குமோ என்று தோன்றிற்றோ என்னவோ! என்னை அந்தக் கம்பெனியின் சொந்த தலைமை டாக்டரைக் கொண்டே சோதிக்க வேண்டுமென்றனர். அவரும் முதலில் சோதித்த டாக்டரின் சோதனையின் முடிவையே ஆதரித்தார்.

எனக்கு மட்டற்ற மகிழ்ச்சி உண்டாயிற்று. பிரிமியம் குறைவாய்க் கட்ட முடிந்ததே என்பதற்காக அல்ல. நான் முப்பத்தைந்து வயதுள்ள இளைஞன் என்று பெரிய டாக்டர்களே எனக்கு அத்தாட்சி கொடுத்து விட்டார்களே என்றுதான். நான் முப்பத்தைந்து வயதில் தான் ஆசனம் செய்ய ஆரம்பித்தேன். அதற்கு மேல் எனக்கு வயது ஆனாலும், என் உடலின் வயது முப்பத்தைந்தாகவே நின்று விட்டது.

மார்க்கண்டேயன் வயது என்றும் பதினாறானது போல ஆசனம் செய்பவர்களின் ஆயுளும் இருக்கும் போலும். இதற்கு முக்கிய காரணம் ஆசனங்களில் தலை சிறந்த இந்த சிரசாசனமே யாகும்.

## பரதநாட்டிய அரங்கேற்றம்



சமீபத்தில் சென்னை மியூஸியம் தியேட்டரில் இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆப் பைன் ஆர்ட்ஸ் ஆதரவின் கீழ் நடைபெற்ற லளித கலை மகாநாட்டின் திறப்பு விழாவன்று இந்தியன் எக்ஸ்பிரஸ் உதவி ஆசிரியர் ஸ்ரீ கண்ணனின் புதல்வி குமாரி கல்யாணியின் பரத நாட்டிய அரங்கேற்றம் சிறப்பாக நடைபெற்றது.

மேற்படி லளிதகலை மகாநாட்டைப்பேராசிரியர் ஆர். சீனிவாசன் அவர்கள் தலைமையில் ஸ்ரீ டி. டி. கிருஷ்ணமாச்சாரியார் திறந்து வைத்தார். மகாநாட்டுக்குத் தலைமை வகித்த பேராசிரியர் சீனிவாசன் குமாரி கல்யாணியின் பரத நாட்டியத்தைப் பாராட்டி ஆசி கூறிவிட்டு, குமாரி கல்யாணிக்கு நாட்டியம் பயிற்றுவித்த நாட்டிய கலா விசாரத பந்தநல்லூர் சொக்கலிங்கம் பிள்ளை அவர்களின் திறமையை வெகுவாகப் புகழ்ந்து பேசினார்.

உலகெங்கும், வெற்றிபெற்ற மனிதர்கள்

# ஜில்லெட்

## உபயோகிக்கிறார்கள்...



எந்த பொருளிலும் சிறந்ததையே வழக்கமாக உபயோகிக்கும் மனிதர்கள் ப்ளூ ஜில்லெட் பிளேடுகளைத்தான் உபயோகிக்கிறார்கள். பணத்தால் இதைவிட சிறந்ததை வாங்கமுடியாது. நீடித்த காலம் உழைப்பதும், மிகவும் கூராக தீட்டப்பட்டதுமான ப்ளூ ஜில்லெட் பிளேடுகள் உங்கள் தாடியை சுலபமாக நீக்கிவிடுகின்றன. ஆயினும் அதன் விலை மிகவும் சரசமாயிருக்கிறது. அதனால் ஒவ்வொரு மனிதனும் ஒரு தனவந்தனைப் போலவே க்ஷவரம் செய்துகொள்ளலாம்.




# ப்ளூ ஜில்லெட் பிளேடுகள்

5 பிளேடுகளுக்கு 14 அணா




மதராஸ் ஆபீஸ் :

5/149, பிராட்வே

ஜி. டி. மதராஸ்

# ஆரம்ப ஆங்கில இலக்கணம்

★

பல்லாயிரக் கணக்கான மாணவர்களின் விடைத் தாள்களைப் பரிசோதித்ததில் ஆங்கிலம் கற்றிடும் மாணவர்களுக்கு இலக்கணத்தில் எவ்வித இன்னல்கள் ஏற்படுமென்பதை ஆராய்ந்து அதன் பலனால் உருவாக்கப்பட்ட அருமையான நூல். இலக்கணப் பிழையின்றி ஆங்கிலம், தமிழ் பேச விரும்பும் மாணவர், ஆரம்ப ஆசிரியர்கள், பொது மக்கள் அனைவருக்கும் இன்றியமையாத அறிவளர் நூல். உதாரணங்கள் அனைத்தும் ஆங்கிலத்திலும், இலக்கண விதிகள் யாவும் தமிழிலும் தரப்பட்டுள்ளது.

**விலை ரூ. 3-0-0**

தபால் செலவு 8 அணா

★

## ஸி. ஸி. பிரஸ்

கைதமுக்கு (K). திருவனந்தபுரம்

---

கவியரசர் டாகூர் காந்தி மகாத்மாவின் பெருமையையும் அவர் இந்தியாவுக்கு ஆற்றியிருக்கும் அருந்தொண்டையும்

## மகாத்மா காந்தி

என்ற நூலில் அழகாக விளக்கியிருக்கிறார்

**விலை அணா எட்டு**

(தபால் செலவு தனி)

●

சசிதேவி எழுதிய

## விஜயா

முதலிய கதைகள்

**விலை ரூ. 2-8-0**

(தபால் செலவு தனி)

●

கிடைக்குமிடம் :

கல்கி காரியாலயம்

மீப்பாக்கம் :: சென்னை

# வனஜாவின் கணவன்

எஸ். வைத்தியநாதன்

தபால்காரன் கொடுத்து விட்டுப் போன கடிதத்தைப் பிரித்துப் படித்துக் கொண்டிருந்தாள் வனஜா. அப்போது அங்கே வந்த ரகுபதி, "யார் வனஜா, கடிதம் போட்டிருக்கிறது! ஒண்ணரைக் கண்ணனா!" என்று சிரித்தவண்ணம் கேட்டான்.

அண்ணாவின் சொற்களைக் கேட்ட வனஜாவின் முகம் கன்றிவிட்டது. கண்கள் நீரைப் பொழியத் தயாராயின. பெரும் பிரயத்தனம் செய்து கண்ணீரைத் தடுத்துவிட்டு "அவர்தான் அண்ணா கடிதம் போட்டிருக்கிறார்" என்றாள்.

அவள் எவ்வளவுதான் முயன்றும் தன் முகத்தில் ஏற்பட்ட மாறுதலை அண்ணன் கவனிக்காமல் மறைக்க முடியவில்லை.

"ஏன், வனஜா! உன் முகம் ஒரு மாதிரியாக இருக்கிறது! கடிதத்தில் வருத்தமளிக்கும் செய்தி ஏதாவது இருக்கிறதா!" என்று கவலையுடன் கேட்டான் ரகுபதி.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. சாதாரணமான கடிதந்தான்."

"பின் உன் முகவாட்டத்துக்குக் காரணம்!"

"என் முகம் வாட்டமடைந்து காணப்படுகிறதா என்ன! எனக்கொன்றும் அப்படித் தெரியவில்லையே!" என்று மழுப்பினாள் வனஜா.

"அது இருக்கட்டும். உனக்கு பட்டுப் புடவை வேண்டுமென்றாயே. மத்தியானம் அம்மாவை அழைத்துக்கொண்டு 'வசீகர விலாஸ்' கடைக்குப் போய் உனக்கு வேண்டிய புடவையை எடுத்துக் கொள். நான் போகும்போது கடையில் சொல்லி விட்டுப் போகிறேன்" என்று கூறிய அண்ணாவுக்கு 'ஆகட்டும்' என்று அசுவாரஸ்யமாகப் பதிலளித்தாள் வனஜா.

ரகுபதி ஆபீஸுக்குச் சென்றான். தங்கையின் நெஞ்சில் குமுறிக் கொண்டு எழுந்த வேதனை அலைகளை அவன் அறியவில்லை. தங்கையின் அத்தகைய வேதனைக்கு அவனிடம் உயிரையே வைத்திருக்கும் தான்தான் காரணம் என்பதும் அவனுக்குத் தெரியாது.

* * *

மகாதேவன் வனஜாவின் அத்தை மகன். அவனுடைய பெற்றோர்கள் ஒரு குக்கிராமத்தில் வசித்து வந்தார்கள். அவ்வூரில் மகாதேவனுக்குக் கல்வி கற்க வசதியான பள்ளிக்கூடம் எதுவுமில்லை. ஆகையால் மாயவரத்திலிருந்த அவனுடைய மாமா—ரகுபதியின் தந்தை, வீட்டிலிருந்து கொண்டு படித்து வந்தான்.

மகாதேவனின் கண் கொஞ்சம் 'ஓரை'க் கண்ணாக இருக்கும். இது அவனைப் பரிகசிக்க ரகுபதிக்கும் வனஜாவுக்கும் வாய்ப்பளித்தது. அவர்களுடைய கேலிக்கு அவன் கண் அடிக்கடி இலக்காகியது. பிறருடைய குறைபாட்டைக் குறித்துக் கேலி செய்து அவனைத் துன்புறுத்தக் கூடாது என்பதெல்லாம் அவர்களுக்கு எப்படித் தெரியும்! சிறு பிராயத்தினர்தானே! எனவே ரகுபதியும் வனஜாவும் மகாதேவனை 'ஒண்ணரைக் கண்ணன்' என்று கூப்பிடுவதில் சந்தோஷமடைந்தனர்.

மகாதேவன் ஒரு சாது. பெரிய மனது படைத்தவன். ரகுபதியும் வனஜாவும் செய்யும் பரிகாசத்தையெல்லாம் பொருட்படுத்தவே மாட்டான்; கோபித்துக் கொள்ளவும் மாட்டான்.

"ஒண்ணரைக்கண் டோரியா!
சென்னப்பட்டினம் போறயா!"

என்ற பாட்டை மகாதேவன் எதிரில் பாடுவதில் ரகுபதிக்கும் வனஜாவுக்கும் வெகு ஆனந்தம். இதைக் கேட்டு மகாதேவன் சிரித்துக் கொண்டே "அவசரப் படாதீர்கள்! கொஞ்ச நாள் கழித்துச் சென்னப்பட்டினம் போகத்தான் போகிறேன், காலேஜில் சேருவதற்கு!" என்பான்.

இந்த ரகளையைப் பார்த்த வனஜாவின் தாயார் மகாதேவனை அப்படியெல்லாம் பரிகாசம் பண்ணக் கூடாதென்று கண்டித்தாள். அப்போது மகாதேவன் "சும்மா சொல்லட்டும், மாமி! நீங்கள் வேண்டுமானால் பார்த்துக் கொண்டிருங்கள்! இந்த வனஜா இப்படிச் சொல்லிக் கேலி செய்வதற்கு ஒரு ஒண்ணரைக் கண்ணனே அவளுக்கு அகமுடையானாக வரப் போகிறான்!" என்று கூறினான்.

"வரும்போது பார்த்துக் கொள்ளலாம்" என்று வனஜா கூறி மகாதேவனுக்கு அழகு காட்டிவிட்டு அங்கிருந்து போய்விட்டாள்.

அன்று முழுவதும் அம்மாவுக்குப் பயந்து கொண்டு ஒன்றும் சொல்லாதிருந்தாள் வனஜா. மறுநாளே அண்ணனும் தங்கையும் மீண்டும் ஆரம்பித்து விட்டார்கள் 'டோரியா' பாட்டை!

வருஷங்கள் பறந்தன. மகாதேவன் அவ்வூர் படிப்பை முடித்துக் கொண்டு சென்னைக்குச் சென்று காலேஜில் சேர்ந்து வாசித்தான்.

மகாதேவன் பி. ஏ. பாஸ் செய்த கையோடு பம்பாயில் ஒரு உத்தியோகத்தைச் சம்பாதித்துக் கொண்டு அங்கே சென்றான்.

இதற்கிடையில் வனஜா வளர்ந்து மணப் பருவத்தை அடைந்தாள். வரன் வேட்டையில் இறங்கினார் அவள் தகப்பனார். எந்த வரனும் அகப்படுவது சிரமமாயிருந்தது. ஏனெனில் வனஜாவின் ஜாதகத்தில் ஏதோ தோஷமிருந்ததால் எந்த ஜாதகமும் அவளுக்குப் பொருந்துவதாக இல்லை. கடைசியில் மகாதேவனின் ஜாதகத்தை வாங்கிப் பார்த்தார். எல்லாப் பொருத்தங்களும் நிரம்பியிருந்தன. மகாதேவனுக்கே அவளைக் கொடுப்பதாகத் தீர்மானமாயிற்று. அவனுக்கு என்ன குறை! நல்ல புத்திசாலி; பி. ஏ. படித்திருக்கிறான்; நல்ல உத்தியோகத்திலிருக்கிறான்; கிராமத்தில் நிலபுலன்களும் இருக்கின்றன. அவளை வனஜாவின் கணவனுக்கிக் கொள்வதில் யாருக்கும் ஆட்சேபமிருக்கவில்லை.

கடைசியில் மகாதேவனின் வாக்கு உண்மையிலேயே பலித்துவிட்டது! வனஜா ஒரு ஒண்ணரைக் கண்ணனுக்கே மாலையிட்டாள். மகாதேவனின் அருமை மனைவியானாள்!

கல்யாணம் ஆனவுடனேயே வனஜா கணவனுடன் பம்பாய் சென்று விட்டாள். இரண்டு வருஷங்கள் கழித்து இப்போதுதான் முதல் தடவையாகப் பிறந்தகம் வந்திருந்தாள்.

அன்று மாலை ரகுபதி ஆபீஸிலிருந்து திரும்பி வந்தபோதே "ஏன் அம்மா, புடவை எடுத்துக் கொண்டு வந்து விட்டீர்களா! வனஜாவுக்குப் பிடித்த கலரில், நல்ல 'டிஸை'னாகக் கிடைத்ததா!" என்று ரகுபதி கேட்ட கேள்விக்கு அவன் தாயாரிடமிருந்து கிடைத்த பதில் அவனை வியப்பும் திகைப்பும் அடையச் செய்தது. 'வனஜா தனக் புடவை வேண்டியதில்லை என்று சொல்லி விட்டாள். நாளையே ஊருக்குப் போகணுமாம்!"

"ஏன் அம்மா அப்படி! நேற்று மாலை கூட தனக்குப் பட்டுப் புடவை ஒன்று வாங்கிக் கொடு என்று என்னை நச்சரித்தாளே! ஏன் அவளுக்கு இந்தத் திடீர் மனமாற்றம்!"

"யார் கண்டார்கள்! அந்தப் பெண்ணுக்கு க்ஷணச்சித்தம், க்ஷணப் பித்தமாக இருக்கு! காலை நீ ஆபீஸுக்குப் போனதிலிருந்து முகத்தைத் தூக்கி வைத்துக்கொண்டு 'உர்' என்று உட்கார்ந்திருந்தாள். என்னடி காரணம் என்று கேட்டதற்கு என்னையும் என் கணவரையும் மதிக்காத இந்த வீட்டில் என்ன வேலை! நான் ஊருக்குப் போகிறேன் என்று அழுதாள்" என்றாள்.

தாயார் கூறிய செய்தி ரகுபதியை மிகவும் வேதனைக்குள்ளாக்கி விட்டது. அவள் ஊருக்குப் போகிறேன் என்று சொன்னாள் என்றால் அவளுக்கு எவ்வளவு துயரம் ஏற்பட்டிருக்க வேண்டும்!

"ஏன், அம்மா! அவளையும் அவள் கணவனையும் யார் அவமதித்தார்களாம்! யார்! என்ன சொன்னார்களாம்!" என்று வினவினான் அவன்.

"அதை நீதான் கண்டு பிடிக்க வேண்டும். அதைத் தெரிந்துகொள்ள நான் செய்த முயற்சி ஒன்றும் பலனளிக்கவில்லை. நீ ஆபீஸுக்குப் போன பிறகுதான் அவள் இந்த அவதாரம் எடுத்திருக்கிறாள். ஒன்று மாத்திரம் சொல்லுவேன். அவளை யாரும் ஒன்றும்சொல்லி விடவில்லை."

"அப்படியானால் நான்தான் அவள் மனது புண்படும்படி நடந்து கொண்டிருக்க வேண்டும் என்று சொல்கிறாயா!"

"நான் அப்படி எங்கே சொன்னேன், ரகு! விஷயம் ஒன்றையும் சொல்லாமல் அது பாட்டுக்கு அடம் பிடிக்கிறது" என்றாள்.



"என்ன தம்பி, மாமா வீடு என்று சொன்னால் பட்டணத்தில் எப்படிக் கண்டு பிடிக்க முடியும்? தெருப் பெயர், வீட்டு நம்பர், இல்லை, வேறு ஏதாவது அடையாளம் ஒன்றுமே தெரியாதா?"

"உம்......ஒரு அடையாளம் தெரியும்"

"என்ன அது?"

"மாடியில் ஏறிப் பார்த்தால் லைட் ஹௌஸ் தெரியும்?"

"வனஜா எங்கே! அவளைக் கூப்பிடு அம்மா" என்றான் ரகுபதி.

"அவள் கோயிலுக்குப் போயிருக்கிறாள்" என்றாள் அவன் தாயார்.

"சரி, அவள் வரட்டும்; நான் விசாரிக்கிறேன்" என்று கூறிவிட்டு ரகுபதி சட்டென்று தன்னறைக்குச் சென்றான்.

அறையில் போய் உட்கார்ந்துகொண்டு ரகுபதி ஆழ்ந்த யோசனையில் மூழ்கினான். வனஜாவையும் அவள் கணவனையும் யார் அவமதித்து விட்டார்கள்! அதுவும் நான் காலையில் ஆபீஸுக்குப் போனதிலிருந்து அவள் ஒருமாதிரி இருக்கிறாளாமே! ஆபீஸுக்குப் போகும்போது நானே என்னையுமறியாமல் ஏதாவது கூறி விட்டேனோ! ஆபீஸுக்குப் போகும்போது அவளிடம் என்ன சொன்னேன்!

பிறகு தான் அவளிடம் கூறியவற்றை ஞாபகப் படுத்திக் கொண்டான் ரகுபதி. திடீரென்று ஒரு சந்தேகம் எழுந்தது அவனுக்கு. தான் 'கடிதம் போட்டிருக்கிறது ஒண்ணரைக் கண்ணனா!' என்று கேட்டதுதான் அவள் மனதைப்புண்படுத்தி விட்டதோ! இருக்காது. இதில் வனஜாவுக்குக் கோபம் வர என்ன இருக்கிறது! சின்ன வயதிலிருந்து மகாதேவனை வேடிக்கையாய் அவ்விதம் கூப்பிடுவது சகஜந்தானே! அப்போதெல்லாம் வனஜாவும் தன்னுடன் சேர்ந்துகொண்டு அவ்விதம் மகாதேவனைக் கூப்பிட்டு அவன் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டிருக்கிறாளே!

பின்னும் சிறிது நேரம் யோசித்தான் ரகுபதி. அவனுக்குப் பளிச்சென்று ஓர் உண்மை புலனாகியது. தான் 'ஒண்ணரைக் கண்ணன்' என்று காலையில் சொன்னதுதான் அவளுக்கு வேதனை யளித்திருக்கிறது! அப்போதே அவள் முகங்கூட மாறிவிட்டதே! நான் கேட்டதற்கு ஏதோ வேறு காரணம் சொல்லி மழுப்பிவிட்டாள். சிறு வயதில் அவளும் அவ்வார்த்தையை அடிக்கடி உபயோகித்திருக்கிறாள். வாஸ்தவம்; ஆனால் அப்போது மகாதேவன் வெறும் அத்தான். இப்போது அவளுடைய அருமைக் கணவன் அல்லவா!

நம் பெண்கள் எதை வேண்டுமானாலும் சகிப்பார்கள். எந்தக் குற்றத்தையும் மன்னிப்பார்கள். ஆனால் தன் கணவனை அவமதித்து உதாசீனம் செய்வதை எந்தப் பெண்ணும் பொறுக்கமாட்டாள். மன்னிக்கவும் மாட்டாள். கனகாபிஷேகம் செய்தாலும் சரி, கணவனை அலட்சியப் படுத்தும் வீட்டில் அவர்கள் ஒரு கணங்கூடத் தங்கச் சம்மதிக்க மாட்டார்கள்!

உள்ளே வனஜாவின் குரல் கேட்டது. அவள் கோயிலிலிருந்து திரும்பி வந்து விட்டாள் என்பதை யறிந்த ரகுபதி அவளைத் தேடிச் சென்றான். "வனஜா! என்னை மன்னித்துவிடு! நான் வேண்டுமென்று உன் கணவனை அவமதிக்கவில்லை. சிறு வயதில் அம்மாதிரி கூப்பிட்டுக் கேலி செய்த பழக்கத்தில் வாய் தவறி அந்த வார்த்தையைச் சொல்லிவிட்டேன். இனி ஒரு நாளும் அவ்வாறு கூறமாட்டேன். இதற்காக வருத்தப் பட்டுக் கொண்டு நீ ஊருக்குப் போவதாகச் சொன்னாய் என்பதைக் கேட்டது முதல் என் மனம் எவ்வளவு துயரப்பட்டுத் தவிக்கிறது தெரியுமா!" என்றான்.

கூம்பியிருந்த வனஜாவின் முகம் மலர்ந்தது. "எனக்கு ஒன்றும் கோபமில்லையே அண்ணா" என்றாள் புன்சிரிப்புடன்.

"சரி, அப்படியானால் புடவைக் கடைக்குப் போகலாம் கிளம்பு என்றான் ரகுபதி."

"நான் தயார் அண்ணா! இதோ கிளம்பி விட்டேன்" என்றாள் வனஜா!

# வாடிய முகம்

மாலு

என்னுடைய பால்ய சினேகிதன் பாலகோபால ராஜன் அன்று என்னைத் தேடிக் கொண்டு வந்தான். வயதுதான் அதிகமாகி உருவம் மாறியிருந்ததே ஒழிய அவனுடைய வழக்கமான குறும்புத்தனமும் சேஷ்டைகளும் அப்படியேதான் இருந்தன. வரும்பொழுதே பத்து வருஷங்களுக்கு முன் பள்ளிக்கூடத்தில் சந்திப்பது போல 'பளர்' என்று என் முதுகில் அறைந்து "என்ன மிஸ்டர், சௌக்கியமா?" என்று கேட்டான்.

அவன் அப்படி என் முதுகில் அறைந்ததைப் பார்த்த என் மனைவி ஏதோ சண்டை போட்டுக் கொள்கிறார்கள் போலிருக்கிறது என்று நடுநடுங்கி விட்டாள்.

நீண்ட நேரம் பல விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம். பேச்சு நடுவில் "இப்பொழுது எங்கே வேலை செய்து கொண்டிருக்கிறாய்? கல்யாணம் எல்லாம் ஆகி விட்டதா?" என்று கேட்டேன்.

"உனக்குத் தெரியாமலா கல்யாணம்? ஒரு கம்பெனியில் குமாஸ்தாவாக இருக்கிறேன். மாதம் நூறு ரூபாய்தான் சம்பளம். ஆனால் கல்யாணத்துக்கு என்னவோ ஏற்பாடு ஆகி யிருக்கிறது!" என்றான்.

"நூறு ரூபாயில் எப்படிக் காலம் தள்ளுகிறாய்?" என்று கேட்டேன்.

"அதையேன் கேட்கிறாய், போ! முப்பது ரூபாய் வீட்டு வாடகை; சாப்பாட்டுக்கு அறுபது ரூபாய்; சினிமா, நடனம் முதலியவைகளுக்குப் பத்து ரூபாய்க்கு மேல் ஆகி விடுகிறது!" என்றான்.

எனக்குத் தூக்கிவாரிப் போட்டது. "என்ன அப்பா இது? நூறு ரூபாய் சம்பளம் என்கிறாய். நூற்றி இருபது ரூபாய்க்குச் செலவுக் கணக்குச் சொல்லுகிறாயே!" என்றேன்.

"அதுதான் ஒவ்வொரு சம்பளத் தேதி வந்ததும் திண்டாடுகிறேன். கடன் வாங்க வேண்டி யிருக்கிறது."

"கடன்காரனுக்கு எல்லாம் என்ன பதில் சொல்லுவாய்? இப்படிச் செலவு செய்தால் கடனைத்தான் எப்படித் திருப்பிக் கொடுப்பது? கலியாணம் செய்து கொண்டால் எப்படிக் குடித்தனம் செய்வது?"

"ஒரு கடன்காரனுக்கு வழிசொல்லி யிருக்கிறேன் பாரேன்!" என்று சொல்லி ஒரு கடிதத்தை என் கையில் கொடுத்தான்.

"ஐயா, தங்கள் கடிதங்களெல்லாம் கிடைத்தன. தங்களுடைய அன்பையும் உபகாரத்தையும் நான் மறக்கவே மாட்டேன். தங்கள் கடன் பாக்கி ரூபாய் முப்பதுக்கும் இத்துடன் ஒரு 'செக்' வைத்திருக்கிறேன்."

பாலகோபாலராஜன்.

குறிப்பு: "என்னிடம் பணம் மட்டும் இருந்திருந்தால் மேற்கண்ட மாதிரிதான் கடிதம் எழுதி யிருப்பேன்" என்று எழுதி யிருந்தது.

இதைப் படித்தபின் எனக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. "கடன் கொடுத்தவனிடம் கூடவா இந்தக் குறும்புத்தனம் எல்லாம்! உனக்கு யார்தான் பெண் கொடுக்கப் போகிறார்களோ?" என்றேன்.

"அப்பாவிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது. பெண் மான்போல இருக்கிறாளாம். நல்ல சொத்தும் இருக்கிறதாம். வருகிற தைமாதத்திலேயே கல்யாணம் நிச்சயம் செய்து விட்டார்களாம். இந்த ஊரிலே தான் பெண் வீடும் இருக்கிறது. 'போய்ப் பார்த்துவிட்டு வா' என்று எழுதி யிருக்கிறார். எனக்கு என்னமோ அங்கு போவதற்குச் சோம்பேறித்தனம். அப்பாவே பார்த்த பிறகு என்ன குறை யிருக்கப் போகிறது. 'பெண்ணைப் பார்த்தேன், பிடித்திருக்கிறது!' என்று ஒரு கடிதம் எழுதி வைத்தேன்."

"எல்லாவற்றிலுமே உனக்கு விளையாட்டுத்தான். அது இருக்கட்டும். ஒரு டீ பார்ட்டிக்குப் போகலாம் வா" என்றேன்.

"ஆகட்டும்" என்று என்னுடன் வந்தான்.

நாங்கள் உட்கார்ந்த மேஜைக்கு எதிரிலேயே ராவ் பகதூர் ராமனாதம் பிள்ளை தம் குடும்பத்துடன் வந்து உட்கார்ந்திருந்தார்.

பாலகோபாலனுக்கு அவரைத் தெரியாது. ஆனால் வழக்கம் போல வேடிக்கையாக ஏதோ பேசிக் கொண்டிருந்தான். ராவ்பகதூர் அதை ரொம்பவும் அனுபவித்தார். இருவரும் ஏதோ பேசிச் சிரித்துக் கொண்டிருந்தார்கள். அந்த சமயத்தில் "உங்கள் பக்கத்தில் விகாரமாக ஒரு பெண்மணி உட்கார்ந்திருக்கிறார்களே, யார் அது?" என்று கேட்டான்.

ராவ்பகதூர் சிரித்துக் கொண்டே "ஏன், என்னுடைய மனைவிதான்!" என்றார்.

அப்போது எனக்கு என்னமோபோல் இருந்தது. பாலகோபாலனுக்கும் சங்கடமாய்ப் விட்டது. சாமர்த்தியமாக, "அந்த அம்மாளைக் கேட்கவில்லை; இந்தப் பக்கத்திலே உட்கார்ந்து !கொண்டிருக்கிறதே, ஒரு பரம விகாரம், அதைக் கேட்டேன்!" என்றான்.

ராவ்பகதூர் மிகவும் அடக்கமான மனிதர். "அவள் என் மகள்" என்றார்.

பாலகோபால் சிரிப்பு விளையாட்டு எல்லாம் எங்கேயோ போய் விட்டது. எனக்கு மிகவும் கோபமாக இருந்தது. நான் உடனே அவனை அழைத்துக் கொண்டு அங்கிருந்து கிளம்பி வெளியில் வந்தேன். "அவரை யார் என்று நினைத்துக் கொண்டாய்? அவர்தான் ராவ்பகதூர் ராமனாதம் பிள்ளை" என்றேன்.

"யாரு? சாம்பசிவம் தெருவிலிருக்கிறாரே அவரா?" என்றான்.

"சாட்சாத் அவரேதான்! உன் பேச்சுக்குத்தான் வரம்பு கிடையாதே?" என்று கடிந்து கொண்டேன்.

"என்ன செய்வேன்! அந்தப் பெண்ணைத்தான் எனக்குப் பார்த்திருக்கிறார்கள்" என்று சொல்லிக் கொண்டே கீழே உட்கார்ந்து விட்டான் பாலகோபாலன். அவன் அழகிய முகம் அப்போது வாடிவிட்டது.

# சீக்கிரமாக மலிவாக

## வேலையை முடிக்க



**மண்வாரிகள்:**
மூன்றுவித நிறுவுகளில் பக்குவப்படுத்தப்பட்ட மரப்பிடிகள் பொருந்தப்பட்டவை. சீரான அமைப்புள்ளதால் வேலை செய்ய இலகுவாக இருக்கின்றன. ஆழமான அலகு வாய்ந்திருப்பதால் அதிகமான சாமான்களை தூக்க முடிகிறது.



**சுத்திகள்:**
செம்மட்டிகள் பலவித பரிமாணங்களில், மேலும் கல் உடைக்கும் சுத்திகள், ஆணி அடிக்கும் சுத்திகள், சாவி திறக்கும் சுத்திகளும் கிடைக்கின்றன. விசேஷமாக உஷ்ணமளிக்கப்பட்ட எஃகிலிருந்து தயாரிக்கப்பட்டவை.



**கோடாரிகள், செம்மட்டிகள்:**
நான்குவித அடிப்படையான நிறுவுகளில், சன்னாக்களிலும், சுரங்கங்களிலும் வேலை செய்பவர்களால் விரும்பப்படுகின்றன. விசேஷமாக உறுதியாக்கப்பட்ட, கூராக வெட்டும் முனைகள் வேலையை இலகுவாக்குகின்றன.

உறுதியான, நீடித்துழைக்கும்

# டாடா அக்ரிகோ

## கருவிகளை

### உபயோகியுங்கள்

தி டாடா அயர்ன் & ஸ்டீல் கம்பனி லிட்.
ஸேல்ஸ் ஆபீஸ்; 23-B, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா.
பிராஞ்சுகள்: பம்பாய், மதராஸ், நாக்பூர், அஹமதாபாத், கான்பூர், ஸெகந்திராபாத், விஜயநகரம் கன்டோன்மென்ட், ஜலந்தர் கன்டோன்மென்ட்.



# உங்கள் சளி ஜுரத்தைக் குணமாக்கிக் கொண்டு

## சுலபமாக மூச்சு விடுங்கள்.

டாக்டர்கள் இந்த அற்புதமான பெப்ஸை சிபார்சு செய்கிறார்கள்.




# PEPS

இருமல், ஜலதோஷம், குளிர், தொண்டைப் புண், இன்புளூயன்ஸா, சளி ஜுரம், மார்வலி, சுவாச கோச நோய்கள் முதலியவற்றிற்கு உகந்தது. சளி ஜுரம் மிகவும் ஆபத்தானது. பெப்ஸ் அதைக் குணப்படுத்தும். பெப்ஸ் மாத்திரைகளை உட்கொள்ளுங்கள். நீங்கள் மூச்சுவிடும்போது, அவற்றின் நறுமணமுள்ள மருந்துச் சத்துக்கள் உங்கள் சுவாசக் குழாய்கள் வழியாக சுவாசக் கோசங்களுக்குச் செல்லும். பெப்ஸ் எரிச்சலைப் போக்கி புண்ணையும் கோழையும் ஆற்றுகிறது. அபாயகரமான கிருமிகள் உங்களுக்கு அதிகக் கெடுதலைச் செய்யுமுன் பெப்ஸ் அவைகளைக் கொன்றுவிடுகிறது. பெப்ஸ் மூச்சு விடுவதை எளிதாக்குகிறது. பெப்ஸ் அற்புதமானது.

பெப்ஸ் தொண்டைப் புண், மார்வலி நோய் நிவாரண மாத்திரைகள் FPY 3

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கம்பெனி, பி. டி., மதராஸ்

---

# பைல் பீன்ஸ்

## அவளுக்குச் சக்தியும் சந்தோஷமும் அளித்தது.








அவள் எப்போதும் நோயினால் சோர்வுற்றுக் கிடந்தாள். நண்பர்கள் கூட அவளைவிட்டுப் பிரியலாயினர். பின்னர், லக்ஷக்கணக்கான மக்கள் செய்வதுபோல, அவளும் பைல்பீன்ஸ் உட்கொள்ளத் தொடங்கினாள். இப்போது ஆனந்தமாயிருக்கிறாள். புத்துயிரும் புதிய சக்தியும் பெற்று விளங்கும் அவளைக் கண்டு அவள் நண்பர்கள் ஆச்சரியப்படுகிறார்கள். மருந்து போர்ட் சங்கத்தார் அங்கீகரித்துள்ள பைல் பீன்ஸ் உங்களைப் புதிய சக்தியோடும் யௌவனத்துடனும் திகழச் செய்கிறது. பைல் பீன்ஸ் மலச்சிக்கல், வயிற்று வலி, அசதி, அஜீர்ணம் முதலியவற்றை குணப்படுத்துகிறது. பைல் பீன்ஸ் உங்களுக்கு மெலிந்த, வசீகரமான தோற்றத்தை அளித்து முன்னைவிட அதிக வனப்புடன் விளங்கச் செய்கிறது.

மருந்து போர்ட் அங்கீகாரம் பெற்ற இந்த அசல் பைல் பீன்ஸ்களையே பார்த்து வாங்குங்கள்

ஏஜண்டுகள்: மெஸர்ஸ். தாதா & கோ., பி. டி. மதராஸ்

FBY: 1



பாவம் அந்தப் பெண்
மலேரியாவினால் என்ன
கஷ்டப்படுகிறாள்

'பாலுட்ரின்'
அந்தத் தொல்லையினின்றும்
என்னைப் பாதுகாத்துவருகிறது



எலும்பையே நொறுக்குவது போன்ற தினசரி குடும்ப வேலைகளுக்கு மேல் மலேரியா வேறு. பாவம் அந்தப் பெண் மெலிந்து வெறும் நிழல்போல ஆகிவிட்டாள். அந்த சாதுப்பெண் அதைப்பற்றி என்னதான் செய்வாளோ கடவுளுக்குத்தான் தெரியும். எப்போது பார்த்தாலும் அவள் நோய், நோய், நோய் என்று நோயினால் நொறுங்குகிறதைத்தான் நாங்கள் காண்கிறோம். ஆனால் தினமும் ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை வீதம் சாப்பிட்டு வந்தால் மூன்று அல்லது நான்கு நாட்களுக்குள் அவள் சுலபமாக குணமடையலாம். அவளது உதாரணம் என்னை உஷாரப்படுத்திவிட்டது. ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் சாப்பாட்டுக்குப் பிறகு ஒரு 'பாலுட்ரின்' மாத்திரை சாப்பிடுவதை நான் வழக்கமாக ஆக்கிக் கொண்டுவிட்டேன். என் குடும்பத்திலே மற்றவர்களும் இதைப் பின்பற்றுமாறு செய்து வருகிறேன். ஆகையினால் மலேரியா எனது வாசற்படிகளை அணுகுவது இல்லை.




**பாலுட்ரின்'**
டிரேட் மார்க்

மலேரியாவுக்கு ஓர் அற்புதமான மருந்து

இம்பீரியல் கெமிகல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்


Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press
116-119, Sladens Garden, Poonamallee High Road, Kilpauk, Madras




"லக்ஸ் டாய்லட் சோப்
என் சரும அழகை பாதுகாக்கிறது"

என்று கூறுகிறார் லலிதா

இனிய மணத்துடன் கூடிய இந்த வெண்மையானதும்
சுத்தமானதுமான சோப் உங்கள் சருமத்தை
வசீகரமாகச்செய்யும்!

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 322-X30 TM

REGD. No. M. 4392

*Registered as a newspaper in Ceylon*

# இரம்மியமானது...

# ஹிமாலயா புக்கே

## டாய்லட், டால்கம் பௌடர்களின்

## மேன்மையான பரிமளம்




வாசனை மிகுந்த, நேர்த்தியான ஹிமாலயா புக்கே பௌடர்கள் உங்கள் அழகு பராமரிப்பிற்கு மிகவும் சிறந்தது. அவைகள் உங்கள் சருமத்திற்கு மிகவும் சாந்தியைக் கொடுக்கும். அவைகளின் நீடித்திருக்கும் பரிமளம் மலர்ச்சியுடன் இருக்கச் செய்கிறது.

நேர்த்தியான
இரண்டு **இராஸ்மிக்** தயாரிப்புகள்

HBP. 9-X30 TM